தர்மத்தால் இஹபரலோக பரலோகங்களில் க்ஷேமம் உண்டாவதாலும் அநாதிகாலந் தொடங்கி நமது தர்மம் நிலைத்திருக்கிறது. இதர மதங்களைப்போல எல்லோரும் ஒரே தர்மத்தை அநுஷ்டித்திருந்தாலும், அசட்டுத்தனமாகத் தனித்தனித் வர்ணத்திற்கேற்பட்ட தர்மங்களை எல்லோரும் அநுஷ்டித்திருந்தாலும் நமது மதம் இவ்வளவு தீர்க்காயுஸாக இருந்திருக்க முடியாது.

ஒரு வீட்டில் நான்கு ஸஹோதரர்கள் இருக்கிறார்கள். மூத்தவன் வீட்டில் இருந்துகொண்டு பூஜை செய்கிறான். அடுத்தவன் பண வரவு செலவுகளைக் கவனித்துக்கொள்கிறான். மற்றொருவன் வீட்டிற்கு வேண்டிய ஸாமான்களை வாங்கிப் போடுகிறான். கடைசி ஸஹோதரன் வயலுக்குப் போய் வ்யவஸாயத்தைக் கவனித்து வருகிறான். இப்படி வீட்டுக் காரியங்களைத் தனித்தனியே பிரித்து நடத்துதல் எல்லாருடைய க்ஷேமத்திற்காகவே. வீட்டுக் காரியங்களும் ஸுலபமாக நடக்கின்றன. இப்படி இல்லாமல் எல்லாரும் எல்லாம் செய்ய ஆரம்பித்தால் என்ன ப்ரயோஜனம்? வீணாகக் கஷ்டந்தான் உண்டாகும். குடும்பமே நன்றாக நடக்காது. ஒருவன் செய்வது எல்லோருக்கும் நன்மை தரும். சாதுர்வர்ண்யமும் இப்படித்தான் உள்ளன. ப்ராம்மணன் தன் கர்மாக்களைப் பண்ணுவது எல்லாரையும் உத்தேசித்துத்தான். பறையனுடைய குழந்தையின் க்ஷேமத்தையும் அவை குறித்தவைதான். க்ஷத்ரியன் அரசாள்வது எல்லாருடைய நன்மையின்பொருட்டே. வைச்யன் வ்யாபாரமும் இப்படியே. இந்த நியமத்தால் லோக வ்யவஹாரங்கள் ஸுலபமாக நடைபெறுகின்றன; க்ஷேமம் உண்டாகிறது. இது மாறினால் லோகக்ஷேமமும் மாறும். பூஜையும் கர்மாநுஷ்டானமும் பண்ணவேண்டிய ஜாதி அதிக

நியமம் உடையது. அந்த நியமத்தால் யாவரும் பயனை அடைகிறார்கள். மற்றவர்கள் ஒதுங்கி நிற்பது தங்களுக்கும் ஒரு ச்ரேயஸை உண்டாக்கத்தான். நாம் செய்யும் ச்ராத்தத்திற்கு ஒரு நிமந்த்ரண ப்ராம்மணன் மடியாக வந்தால், நாம் விழுப்பாக இருந்துகொண்டு, "நீமட்டும் மடியாக இருப்பது என்ன? நான் உம்மேற் படுவேன்" என்று சொல்லி அவ்வாறு செய்தால் யாருக்கு நஷ்டம்? இருவருக்குமல்லவா?

ஆகையால் ஒரே தர்மம் பலவகையாகப் பிரிந்து இருப்பதில் பல அநுகூலங்கள் இருக்கின்றன. நம்முடைய தர்மம் என்றும் சாவாமல் இருக்க, முதலில் இதுவே ஒரு காரணமாக இருக்கிறது. தர்மங்களில் வேற்றுமையும் வேண்டும்; ஒற்றுமையும் வேண்டும். ஒரேயடியாகப் பிரிந்தே இருக்கக்கூடாது; ஒரேயடியாக ஒன்றாக இருக்கக் கூடாது. சிலர் ஒரேயடியாகப் பிரிக்கப் பார்க்கிறார்கள்; சிலர் ஒரேயடியாகச் சேர்க்கப் பார்க்கிறார்கள்; இவ்விதமாக இரண்டும் வேண்டாம் என்று தர்மசாஸ்த்ரம் சொல்லுகிறது. நான் அதற்குப் ப்ரதிநிதியாக வந்திருக்கிறேன். அதனால்தான் வேற்றுமையும் வேண்டும், ஒற்றுமையும் வேண்டும், ஒரேயடியாக இரண்டும் கூடாதென்று சொல்லுகிறேன்.

தொடாமல் இருப்பது மரியாதையைக் காட்டுமே யொழிய த்வேஷத்தைக் காட்டாது. பலர் ஒன்று சேர்ந்து சாப்பிடுவது அவசியமில்லை யென்றும், ஜாதிவிட்டு வேறு ஜாதியில் கலப்புக் கல்யாணம் செய்வது அவசியமில்லை யென்றும், இவைகள் இல்லாமலே ஜனங்கள் ஒற்றுமையாக இருக்கக்கூடுமென்றும் முக்யமான ராஜீயவாதிகள் கூறுகிறார்கள். தொடுவதும் அவசியமில்லை என்று நான்

சொல்லுகிறேன். ஒன்றாகச் சாப்பிட்டுக்கொண்டும், ஒன்றாகக் கல்யாணம் பண்ணிக்கொண்டும், ஒன்றாகத் தொட்டுக் கட்டிப் புரண்டுகொண்டும் இருக்கும் மேல்நாட்டு ஜாதிகளில் எவ்வளவு போட்டிகளும் சண்டைகளும் காணப் படுகின்றன !

உண்மையில் எவ்வளவு வேற்றுமை இருந்தாலும் அன்பு இருந்தால் சாந்தம் இருக்கும். எவ்வளவு கூடி இருந்தாலும் அன்பு இல்லாவிட்டால் கலஹம்தான் உண்டா கும். எல்லா ஜாதிகளிடத்திலும் ஒரேவிதமான அன்பு இருக்கவேண்டும். நம்முடைய தாயினிடமும் குழந்தையி னிடமும் எந்தவித அன்பு நமக்கு இருக்கிறதோ அத் தகைய அன்பு பறையர்களிடத்தும் இருக்கவேண்டும். என்ன விதமான கஷ்டங்கள் இருந்தாலும் அன்பை விடக் கூடாது. அந்த அன்பு தர்மமார்க்கத்துக்கு விரோதமில் லாமல் இருக்கவேண்டும். தரித்திரத்தை நிவர்த்தி செய் வதிலோ, துன்பத்தை நீக்குவதிலோ, மற்ற ஜாதியார்க ளிடத்து அன்பு வைத்து நம் சக்திக்கும் மீறிச் செய்தாவது அவ்வன்பை வளர்க்கவேண்டும். நம்முடைய புத்திக்குத் தோன்றுவதெல்லாம் ஸரியென்று சொல்லமுடியாது. ஒரு ஸமயத்தில் தோன்றுவது மற்றொரு ஸமயத்தில் தோன்றாது. ஆகையால் சாந்தமாகவும் உறுதியாகவும் இருந்து தர்மத் தைக் காப்பாற்றவேண்டும். இன்றைக்கு ஒன்று சொல் பவர்களே மறுபடி வேறொரு காலத்தில் மாறி வேறு சொல்லு வார்கள். கலப்புச் சாப்பாடு, கலப்புக் கல்யாணம் இவை அவசியமில்லை யென்று ஒப்புக்கொண்டவனே, தொடுவதும் அநாவசியம் என்று சொல்லுங்காலம் வந்தாலும் வரும்.

நந்தனார் கோயிலுக்குள் வர மாட்டேன் என்றார். பிராம்மணர்கள் வரத்தான் வேண்டுமென்றார்கள். ஸ்வாமி

நந்தியை விலகச் செய்து காட்டிக் கொடுத்தார். இம்மூன்றிலும் உள்ளடங்கி யிருக்கும் தத்வந்தான் வர்ணாச்ரமதர்மம். நந்தனார்தான் அந்தத் தர்மத்தைக் காப்பாற்றினவர் என்று சொல்லலாம்.

எந்த ஜாதியினிடத்தும் உண்மையான அன்பு ஏற்பட்டால் சாந்தம் உண்டாகும். ஒரு கிராமத்திற்கும் மற்றொரு கிராமத்திற்கும் வாய்க்கால் விஷயமாகச் சண்டை ஏற்படுகிறது. இந்தக் கிராமத்திலுள்ள பறையன் முதல் பிராம்மணர்கள் வரையில் எல்லோரும் ஒன்றாக இருப்பார்கள். அதே போல அந்தக் கிராமத்திலும் ஒன்றாக இருப்பார்கள். இந்த ஊர்ப்பறையனும் அந்த ஊர்ப்பறையனும் ஜாதி ஒன்றுதானே என்று நினைத்துச் சேர்ந்து கொள்ளமாட்டார்கள். ஒரு கிராமம் என்ற ஐக்கியமே இருக்கும். இந்த ஊர்ப்பறையன் அந்த ஊர்ப் பிராம்மணனோடு சண்டை போடுவான். எல்லோருக்கும் பொதுவான காரியம் ஆதலால் இங்கே ஜாதி வேற்றுமை இல்லை. ஒவ்வொருவனும் கிராமத்திற்காகச் சண்டை செய்வான். அதுபோல மன ஒற்றுமை ஏற்படவேண்டும்.

பிராம்மணன் செய்யும் வைச்வதேவத்தில் சண்டாள பலி கொடுக்கவேண்டும் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. அவனுக்காக இவன் செய்வதனால் இருவரிடமும் அன்பு உண்டு என்று தெரிகிறது. பழைய காலத்து கிராமங்களில் அன்பும் ஒற்றுமையும் இருந்து வந்தது. கால தேச வர்த்தமானங்களின் மாறுதலால் கிராமஸமுதாயமும் மாறிவிட்டது. பணக்காரர்கள் பட்டணங்களுக்கு வந்துவிட்டார்கள். அங்கே ஒவ்வொருவரும் தனித்தனியே பற்றின்றி இருக்க ஆரம்பித்துவிட்டார்கள். கிராமத்தின்

கட்டு விட்டுப்போய்விட்டது. இந்த ஸமயத்தில் அந்நிய மதஸ்தர்கள் புகுந்து உபதேசம் செய்தார்கள். அதனால் ஜாதிக்கட்டுப்பாடு போயிற்று. அவர்கள் தரித்திரம் அதிகமாக இருந்த காலத்தில் தங்கள் மதப்பிரசாரம் செய்தார்கள். கிராமத்திலிருந்த ஏழைஜனங்கள் மயங்கி விட்டார்கள். அவர்களுடைய மதத்திற் சேர்ந்தார்கள். நம்முடைய மதத்திற் சேர்பவர்களுக்கும் மற்ற மதத்திற் சேர்பவர்களுக்கும் ஒரு பெரிய வித்தியாஸம் இருக்கின்றது. ஏழைகளும் கூலிக்காரர்களும் இந்த மதத்திலிருந்து வேறு மதங்களுக்குப் போகின்றார்கள். மற்ற மதத்தினர்களிலோ அதிகமாகத் தத்வ விசாரணை செய்தவர்கள்தாம் நம்முடைய மதத்திற்கு வருகிறார்கள்.

அந்நிய மதஸ்தர்கள் புகுந்த பொழுதே நாம் நமது மதத்தினர்களைக் காப்பாற்ற முயன்றிருக்க வேண்டும். அப்பொழுது செய்யாததனால் இப்பொழுது ஒற்றுமையிற் குறைவு ஏற்பட்டிருக்கிறது.

மேல்நாட்டு அந்நிய மதஸ்தர்களை நாம் ஏன் பின்பற்ற வேண்டும். நடை யுடை பாவனைகளில் அவர்கள்தாம் நம்மைப் போல் இருக்கட்டுமே என்று தைரியமாக நம் நிலையிலேயே இருக்கவேண்டும். நம் மதத்தில் எல்லாருக்கும் பொதுவாகச் சொல்லப்பட்ட தர்மங்களை நன்றாகச் செய்யவேண்டும். வாஸ்தவமான அன்பு இருந்தால் கஷ்டங்கள் தாமே நிவர்த்தியாகும். தனித்தனியாக உள்ள தர்மங்களெல்லாம் ஒரு பொதுமதத்துக்கு ஆதாரமாக இருக்கின்றன. எந்த ராஜாங்கம் வந்தாலும் எது எப்படியானாலும் நாம் தர்மத்தை அநுஷ்டித்து வர வேண்டும். ஜீவனத்தை உத்தேசித்துத் தர்மங்கள் கெட்டுப்போயின. அப்படி விட்டிருக்கக் கூடாது. ஆபத்துக் காலங்களிலும் தர்மத்

தில் ஒரு கண் இருக்கவேண்டும்; அநுஷ்டானங்களை விடக்கூடாது. ஒருவன் தன் வர்ணத்துக்குரிய அநுஷ்டானம் செய்வது பொதுவில் தேசத்துக்கே க்ஷேமத்தைத் தரும். பிராம்மணன் ஸ்நானம், ஸந்தியாவந்தனம், பூஜை முதலியவற்றைப் பறையனுடைய க்ஷேமத்தின் பொருட்டும் செய்ய வேண்டும். நம்முடைய மதரக்ஷணத்திற்குச் சாஸ்திரந்தான் வழி காட்டுகிறது. தாபத்திற்கு அன்புதான் சமனம். உண்மையாக நம்மிடம் அன்பு இருந்தால் நாம் ஜயத்தை அடைவோம். பரஸ்பர ஸஹாயத்தை அன்புகொண்டு செய்ய வேண்டும். எந்தக் காலத்திலும் அன்பு குறையக்கூடாது. கவலையை விரட்டிவிடவேண்டும். என்ன விபரீதம் ஏற்பட்டாலும் அன்பைக் கைவிடக்கூடாது. நம்முடைய நல்ல பிரயத்தினங்களைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். பரோபகாரம் செய்யவேண்டும்.

லோகம் புரண்டுபோனாலும் நம்முடைய கடமைகளைச் செய்துகொண்டு பயமின்றி அன்புடன் ஸாமான்யதர்மங்களை நன்றாக ரக்ஷித்து விசேஷதர்மத்தைக் கூடியவரைக்கும் ரக்ஷிக்கவேண்டும். அதற்குரிய சக்தியைப் பகவான் அருள்வாராக.

# 10

# ஸாமான்ய தர்மங்கள்

[16—10—1932.]

எல்லாருக்கும் பொதுவான தர்மங்கள் இன்னவை என்பது மநுதர்மசாஸ்திரத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

अहिंसा सत्यमस्तेयं शौचम् इन्द्रियनिग्रहः । [மநுஸ்ம்ருதி.]

இந்த ஐந்தும் மிகவும் முக்கியமானவை. வேதத்தில் மாத்ரு பக்தி, பித்ருபக்தி, குருபக்தி, தெய்வபக்தி முதலியவைகளும் ஸாமான்ய தர்மங்களாகச் சொல்லப்படுகின்றன.

இந்த ஐந்தைப்பற்றி யோசிக்கலாம்.

## 1. அஹிம்ஸை.

அஹிம்ஸை என்பது எல்லோருக்கும் வேண்டியது. ஓர் எறும்பைக்கூட நாம் கொல்லக்கூடாது. யாருடைய சரீரத்துக்கும் ஒரு கஷ்டத்தை உண்டுபண்ணக்கூடாது. அதுதான் அஹிம்ஸை. இந்த அஹிம்ஸை யோகாங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

யோகம் என்பது என்ன? மனதை நிறுத்துதல்தான் யோகம்

योगश्चित्तवृत्तिनिरोधः

என்று யோகசாஸ்திரம் சொல்லுகிறது.

மனதில் ஆசை உண்டாகிறது. பல விஷயங்களை அது நினைக்கின்றது. அதனால் அநேகவிதமான விகாரங்கள் உண்டாகின்றன. நமக்கு மனதினால்தான் எல்லாவிதமான கஷ்டங்களும் உண்டாகின்றன

मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः ।

என்று சொல்லியிருக்கிறது. பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் காரணம் மனதுதான் என்பது தாத்பரியம். நாம் நமது மனம் எப்படி இருக்கவேண்டுமென்று நினைக்கிறோமோ அப்படி இருக்கிறதில்லை. நாம் ஒரு வஸ்துவை நினையென்றால் அது வேறு எங்கேயாவது போய் நிற்கிறது. ஒன்றையாவது நினைக்காமல் இரு என்றால் அது முடியவே முடியாது. பேசாமல் இரு என்றால் வாய்பேசாமல் இருக்கும். கண்ணைப் பார்க்காதே என்றால் அது பார்க்காமல் இருக்கும். மனதை நினைக்காமல் இரு வென்றால் அப்படி இருப்பதில்லை. மனது நம்முடைய ஸ்வாதீனத்தில் இல்லை. நமக்கு மனது வசப்படவில்லை. நமக்கு உண்மையில் மனது ஸ்வாதீனமாக இருந்தால் நம்முடைய இஷ்டப்படி அது நடக்கவேண்டும். நினைக்காதே என்றால் நினைக்காமல் இருக்கவேண்டும். ஆனால் நாம் எதை நினை என்கிறோமோ அதை விட்டுவிட்டு விபரீதமான ஒன்றைத்தான் அது நினைக்கிறது. பைத்தியம் பிடித்தவன் மௌனமாக இருப்பதில்லை; வாயினால் எதையாவது பேசிக்கொண்டே இருக்கிறான். அவன் வாயை அடக்க முடிவதில்லை. அதுபோல நாம் மனதை அடக்கமுடியவில்லை. நாம் மனதினால் பைத்தியமாக இருக்கிறோம். நமக்குப் புத்தி ஸ்வாதீனம் இருந்தால் நாம் சொன்னபடி அது கேட்கவேண்டும். நினை என்றால் நினைக்கவேண்டும். நில்

இரு என்றால் மனது இருந்துவருகிறது. ஸ்வாமியாகவே இருந்துவிடு என்றால் இருந்துவிடும். இன்னும் எது சொன்னாலும் கேட்கும். அதுதான் யோகம்.

நமக்கு எதை நினைத்தால் ஸௌக்கியம் உண்டாகுமோ அதை நினைக்காமல் மற்றவற்றை நமது மனது இப்பொழுது நினைக்கிறது. என்ன பண்ணினால் இந்த மனது ஸ்வாதீனத்துக்கு வரும்? கொஞ்சம் கோபித்துக்கொள் என்றால் கோபித்துக்கொள்ளவேண்டும். கூடாது என்றால் சும்மா இருக்கவேண்டும். இதற்கு ஒருவழி தேடவேண்டும். அதையும் சாவதற்குள் தேடவேண்டும்.

तमेवं विद्वानमृत इह भवति । [புருஷஸூக்தம்.]

என்று வேதம் சொல்லுகிறது.

शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥

[கீதை, V-23.]

காமக்குரோதங்கள் வருவதற்கு ஹேதுக்கள் இருக்கையில் அந்த வேகத்தை இந்த ஜன்மத்திலே அடக்கப் பிரயத்தினம் பண்ணவேண்டும். அப்படிச் செய்கிறவன்தான் யுக்தன். யுக்தன் என்றால் யோகத்தோடு கூடியவன் என்பது அர்த்தம். யோகங்களெல்லாம் ரிஷிகளுக்கு மாத்திரம் அல்ல. மருந்து யாருக்கு வேண்டும்? வியாதியுள்ளவனுக்கல்லவா வேண்டும்? மனோவியாதி நமக்கு இருக்கிறது. ஆகையால் நமக்குத்தான் இவை வேண்டும். மனது அடங்க வழி என்ன? இரண்டு ஸாதனங்கள் உள்ளன. பஹிரங்கஸாதனம், அந்தரங்கஸாதனம் என்று இரண்டு. அவற்றைப் பற்றித் தெரிந்தவர்களை நாம் கேட்கவேண்டும். மனதை அடக்கினவர்களைக் கேட்கவேண்டும். கிருஷ்ண பகவான்

களில் ஒன்று அஹிம்ஸை. மனது சொன்னபடி கேட்க அஹிம்ஸை ஒரு ஸாதனம். மனதினால் ஆகாத காரியம் ஒன்றும் இல்லை. அது கட்டுப்படாததனால் ஒன்றும் செய்ய யோக்கியதை இல்லாமல் இருக்கிறது. யானை கட்டுப் படாவிட்டால் நமக்கு ஒன்றும் பிரயோஜனம் இல்லை! உபத்திரவந்தான் உண்டு. கட்டுப்பட்டுவிட்டால் எவ் வளவோ காரியங்களை ஸாதித்துக்கொள்ளலாம். இந்த மனது எவ்வளவோ யானைபலம் உடையது. விச்வாமித்திரர், ஹநூ மான் முதலியவர்கள் மனோஜயம் பண்ணினவர்கள். அதனால் தான் அவர்களுக்கு அவ்வளவு சக்தி இருந்தது. அந்த மனது தான் நம்மிடமும் இருக்கிறது. அது சொன்னபடி கேட்கச்செய்தால் நாமும் எது வேண்டுமானாலும் பண்ண லாம். பிரபஞ்சம் முழுதும் ஒரு மனதால் ஸிருஷ்டிக்கப் பட்டது என்று வேதாந்தம் சொல்லுகிறது. எறும்பினுடைய சின்ன மனதுக்குக்கூடப் இந்தப் பிரபஞ்சம் போதாது.

மனது ஒரு பூதம் போன்றது. விக்ரமார்க்கன் கதை யில் சொல்லப்பட்ட வேதாளத்தைப்போன்றது. வேதாளம் கட்டுப்பட்ட பின்பு எவ்வளவு காரியங்களைச் செய்ததோ அதைப்போலவே மனதும் செய்யும். அந்த மனதை நமது ஸ்வாதீனப்படுத்துவதுதான் யோகமென்பது. அந்த யோகத்திற்கு அங்கம் அஹிம்ஸை. மனதை வசப்படுத் தியவர்கள், அஹிம்ஸையை அநுஸரித்தோம், மனது வசப் பட்டது என்று சொல்லுகிறார்கள்.

ஆகவே, இந்த அஹிம்ஸையானது மனுதர்மசாஸ்தி ரத்தில் ஸாமான்ய தர்மங்களுள் ஒன்றாகச் சொல்லப்பட் டிருக்கிறது; யோகசாஸ்திரத்தில் யோகத்திற்கு அங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அஹிம்ஸையின் பெருமை நன் றாக விளங்குவதற்காக இவ்வளவு விரிவாகச் சொன்னேன்.

ஒரு முக்கியப் பிரயோஜனத்துக்காக ஒரு காரியம் செய்தால் வேறு சில பிரயோஜனங்களும் உண்டாகும். அவற்றிற்கு அவாந்தரப் பிரயோஜனம் என்று பெயர். மடத்திற்குப் பூஜைதரிசனம் செய்ய வந்தோம். பூஜை தரிசனத்தோடு பல சாஸ்திரிகளுடைய உபந்யாஸங்களைக் கேட்டோம். மேளம் கேட்டோம். இவை தாமாகவே கேட்பவை. நமது உத்தேசியம் இவைகள் அல்ல. அநேகம் பேர்களைப் பார்க்கிறோம். பல வித்வான்களையும் பக்தர்களையும் பார்க்கிறோம். இவையெல்லாம் உத்தேசிக்காத பிரயோஜனம். பூஜைதரிசனம் முக்கிய பிரயோஜனம். மற்றவைகளெல்லாம் அவாந்தரப் பிரயோஜனங்கள்.

அஹிம்ஸைக்கும் சில அவாந்தரப் பிரயோஜனங்கள் உண்டு. அஹிம்ஸையின் முக்கிய உத்தேசம் சித்தம் அடங்குவது. அதுதான் முக்கியப் பிரயோஜனம். அதைத் தவிர அவாந்தரப் பிரயோஜனம் வேறு கிடைக்கிறது.

अहिंसा प्रतिष्ठायां तत्सन्निधौ वैरत्यागः

[பாதஞ்ஜலயோகஸூத்ரம் 4.]

என்று யோகஸூத்ரம் சொல்லுகிறது. அஹிம்ஸையைத் திரிகரணங்களாலும் ஸாதித்துவிட்டோமானால் நமக்கு எதிரில் யாவரும் சாந்தம் அடைவார்கள்.

ஒருவன் மற்றொருவனைக் கஷ்டப்படுத்த நினைக்கக் கூடாது. வாயாலும் ஒருவனுக்குக் கஷ்டத்தைத் தரும் பேச்சைப் பேசக்கூடாது. அப்படியே சரீரத்தாலும் யாவருக்கும் ஹிம்ஸையைச் செய்யக்கூடாது. ஸ்வபாவத்தில் ஒருவனுக்கும் பரஹிம்ஸையெண்ணம் தோன்றாது. ஆனால் பிறர் எதாவது குற்றம் செய்தால் கோபத்தினால் ஹிம்ஸை பண்ணத் தோன்றும். நம்முடைய குழந்தை கூரையில் நெருப்பு வைத்துவிட்டால் அப்பொழுது அதைக்

கோபித்துக் கொள்வோமா? உடனே நெருப்பை அணைப்போம். நாளைமுதல் அப்படி நேராமல் பார்த்துக் கொள்வோம். அதைப்போலவே துன்பம் பண்ணுகிறவனிடத்திலும் நடக்க வேண்டும். குழந்தையைப்போலவே அவனைப் பாவிக்கவேண்டும். அதுதான் அஹிம்ஸை. அந்த அஹிம்ஸையால் சித்தவிருத்தி அடங்குவது முக்கியப் பிரயோஜனம். அதைத் தவிர, அவனுக்கு எதிரில் கொலைபண்ணவேண்டும் என்று வரும் கோபம் உடையவர்கள் கூடச் சாந்தம் அடைவார்கள். அவன் இருக்கும் இடத்தில் குரூரமானவர்களுக்கும் மனதில் சாந்தம் உண்டாகும். அதுதான் அஹிம்ஸையின் அவாந்தரப் பிரயோஜனம். அது தானாக வரும்.

வர்ணாச்ரமதர்மங்களில், பிராம்மண வர்ணத்தில் பிறந்து ஸந்யாஸ ஆச்ரமத்தை உடையவர்கள் அஹிம்ஸையைப் பூர்ணமாக அநுஷ்டிக்கவேண்டும். ஸந்யாஸம் வாங்கிக் கொள்ளும்பொழுதே அவர்கள்

अहिंसन् सर्वभूतान्यन्यत्र तीर्थेभ्यः

[சாந்தோக்யோபநிஷத்]

என்று பிரதிஜ்ஞை செய்து கொள்கிறார்கள். ஸகல பிராணிகளுக்கும் என்னால் பயம் இல்லை என்பது அதன் தாத்பர்யம். கிரஹஸ்தன் ஸ்வதர்ம விஷயத்தைத்தவிர மற்றவற்றில் அஹிம்ஸையை அநுஷ்டிக்கவேண்டும். வேதத்தில் சொல்லப்பட்ட கிரியைகளில் ஹிம்ஸை இருக்கலாம். ஆகலால் அந்தக் கிரியைகளைத் தவிர மற்றவற்றில் அவன் அஹிம்ஸாநுஷ்டானம் செய்யவேண்டும். கௌதம தர்மஸூத்ரத்திலும் சாந்தோக்யோபநிஷத் முடிவிலும் இந்த அஹிம்ஸையைப் பற்றிய விஷயங்கள் சொல்லப்படுகின்றன. வேத

விஹித கர்மாக்களில் தவிர மற்றவைற்றில் கிருஹஸ்தன் அஹிம்ஸையைக் கைக்கொள்ளவேண்டும். பூர்ணமாக அநுஷ்டானம் செய்யவேண்டியது ஸந்யாஸியின் கடமை. அவன் சமையல் பண்ணக்கூடாது; இலை பறிக்கக்கூடாது; அதைப் போன்ற வேறு காரியங்களையும் செய்யக்கூடாது.

2. ஸத்தியம்.

ஸத்தியத்திற்கு லக்ஷணம் (definition) ஒன்று உண்டு.

वाङ्मनसयोरैकरूप्यं सत्यम्

மனதும் வாக்கும் ஒரே விஷயத்தைச் சொல்வதுதான் ஸத்தியம். மனதிலுள்ளதைச் சொல்லத்தான் பகவான் நமக்கு வாக்கைக் கொடுத்திருக்கிறார். வாக்கை அஸத்தியத்திற்கு உபயோகப்படுத்தினால் மாடாகப் பிறக்க வைப்பார். அஹிம்ஸையில் எப்படி கிருஹஸ்தனுக்கு ஒரு விலக்கு இருக்கிறதோ, அப்படி ஸத்தியத்திற்கும் ஒரு விலக்குண்டு. அஹிம்ஸையிலுள்ளது கிருஹஸ்தனுக்கு மட்டுந்தான். இது எல்லாருக்கும் உண்டு.

ஊரிலுள்ளவர்களின் குற்றங்களை எல்லாம் ஒருவன் எடுத்துச் சொல்லுகிறான். "அவன் அயோக்கியன். அவன் அங்கே நின்றான். இவன் இது செய்தான்" என்று அவன் சொல்லுகிறான். அவன் சொல்லுவதெல்லாம் நிஜமாக இருக்கலாம். அது வாக்கு மனதுகளின் ஐக்யமாக இருந்தாலும் ஸத்தியமாகாது.

सत्यं भूतहितं प्रियम्

என்று சொல்லப்பட்டிருக்கிறது. மனதிலுள்ளது வாக்கில் வரவேண்டுமென்பது பொது லக்ஷணம். எதற்காக

தையே சொல்லும். அப்பொழுது சொல்லப்படுபவை எல்லாம் ஸத்தியமாகும். தவறி ஒன்று சொல்லப்பட்டாலும் அந்தச் சொல் ஸத்தியமாகவே ஆகிவிடும். உள்ளதையே சொல்லும் வாக்கின்படியே எல்லாம் இருக்கும். தவறிச் சொன்னாலும் அப்படியே நடந்துவிடும். வார்த்தை வசித்தியாவது ஸத்தியத்தினால்தான். வாக்கிலிருந்து வந்தது உள்ளதாய்விடும் சக்திதான் பலாச்ரயசக்தி. ஸத்தியம் பேசுபவர்கள் இன்றைக்கு பூர்ணிமை என்றால் சந்திரன் அப்படியே வந்து நிற்பான். க்ரியாபலாச்ரயசக்தி உண்டாகும்.

பணத்தில் நமக்கு ஆசை இல்லை என்று தோன்றுகிறது. அதற்கு என்ன அடையாளம்? கனவிலும் பணம் வேண்டாம் என்ற நினைவு இருந்தால் அந்த ஆசை இல்லாதது ஸ்திரமென்று நம்பலாம். கனவில் பணத்தை ஒருவன் கொடுத்தால் 'கொண்டுவா' என்று சொன்னால் அது தப்பு. அதைப்போலக் கனவிற்கூட ஸத்தியத்தைக் கைவிடாத ஸ்திரபாவம் வேண்டும். அப்பொழுது ஸத்தியஸித்தி உண்டாகும். நாம் சொல்வதெல்லாம் நடக்கும்.

सत्यप्रतिष्ठायां क्रियाफलाश्रयत्वम् । [யோகஸூத்ரம்]

இந்த அவாந்தர பிரயோஜனத்தை உத்தேசித்து ஸத்தியத்தை அநுஷ்டிக்கக்கூடாது.

வைராக்கியம் என்று ஒரு அந்தரங்கஸாதனம் இருக்கிறது. ஆசையில்லாமை என்பதுதான் அதன் அர்த்தம். அது மஹா பலமாகச் சொல்லப்படுகிறது. அதனுடைய அவாந்தர பலம் புதையலெல்லாம் கண்ணுக்குத் தெரியும் சக்தி. நான் வைராக்கியமுடையவன்; எனக்குப் புதையல்

தெரியவில்லையே என்று ஒருவன் சொன்னால் அவனுடைய வைராக்கியம் எப்பேர்ப்பட்டதென்பது நன்றாகத் தெரிகிறது. புகையிலை எதிர்பார்த்தால் அவன் உண்மை வைராக்கியத்தை உடையவனாகமாட்டான்.

அதைப்போலவே ஸத்தியத்தினுடைய அவாந்தரப் பிரயோஜனத்தை உத்தேசித்து அதை நாம் அனுஷ்டிக்கக் கூடாது.

## 3. அஸ்தேயம்.

அந்நியாய ஆசை கொண்டு இருக்கக்கூடாது. அஸ்தேயம் என்றால் திருடாமல் இருப்பது என்பது அர்த்தம். மற்றவன் ஸொத்தை ஏமாற்றிப் பெறக்கூடாது. அபஹரிக்கக் கூடாது. எல்லாவற்றையும்விடக் கூட்டத்தில் ஏமாற்றித் திருடுவது மிகவும் கேவலமான காரியம்.

## 4. சௌசம்.

சரீர சுத்தி மனசுத்தியை உண்டாக்கும். சரீர சுத்தத்திற்கு ஏற்பட்ட காரியங்கள் தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்பொழுது முப்பது அல்லது நாற்பது வருஷ காலமாக சௌசம் நமது தேசத்தில் தவறியிருக்கிறது. இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன பதார்த்தங்களைக் கொண்டு சரீரத்தைச் சுத்தி செய்துகொள்ளவேண்டும், இன்ன இன்ன பாத்திரங்களை இன்ன விதம் சுத்தம் செய்யவேண்டும் என்று விஷயங்கள் சாஸ்திரங்களிற் காணப்படுகின்றன. சுத்தம் எல்லா விதமான கர்மாக்களுக்கும் முதலில் அவசியம். அது தவறாமல் இருக்கவேண்டும். இப்பொழுது நாம் மறந்துபோனதையும் தெரிந்துகொண்டு அநுஷ்டானம் செய்யவேண்டும். இதைக்

கூட நாம் சரியாகச் செய்யாவிட்டால் மனதை எப்படி அடக்குவது ?

இதைக் காதில் கேட்டுவிட்டுப் போவதால் மட்டும் பிரயோஜனமில்லை. காரியத்திற் செய்யவேண்டும். நாம் மௌனமாக இருக்கவேண்டுமானால் சுத்தமாக இருக்கவேண்டும். குழந்தைகள் முதற்கொண்டு விருத்தர்கள் வரையில் தங்கள் தங்களுக்கென்று ஒவ்வொரு செம்பு தனித் தனியே வைத்துக்கொள்ளவேண்டும். அதைக்கொண்டே சுத்திசெய்து கொள்ளவேண்டும். தீர்த்தபாத்திரம் தனித் தனியே வைத்துக்கொள்ளவேண்டும். மற்றவன் பாத்திரத்தில் தீர்த்தம் வாங்கிக் குடிக்கக்கூடாது. அந்த அந்தப் பாத்திரம் செய்யப்பட்ட லோஹத்திற்குத் தக்கபடி சொல்லப் பட்ட பதார்த்தங்களால் சுத்தி செய்யவேண்டும். வெள்ளிப் பாத்திரமென்றால் அதற்குச் சொல்லப்பட்ட வஸ்துவால் அதைச் சுத்தி செய்யவேண்டும். தாமிரம் முதலியவைகளா னால் அதற்கு ஏற்றபடி சுத்தி செய்யவேண்டும். எங்கே சாப்பிடப்போனாலும் நம்முடைய தீர்த்தபாத்திரத்தை எடுத்துக்கொண்டு போகவேண்டும். மற்றவன் பாத்திரத்தை உபயோகிக்கக்கூடாது. இப்படி எல்லா ஜாதிகளும் செய்ய வேண்டும். தங்கள் தங்கள் ஜாதிக்கேற்ற காரியங்களைச் செய்வதில் சுத்தமாக யாவரும் இருக்கவேண்டும்.

## 5. இந்திரியநிக்ரஹம்.

நம்முடைய இந்திரியங்களை அவைகளின் போக்கிலே விட்டுவிடக்கூடாது. ஒவ்வோரிந்திரியத்திற்கும் இவ்வளவு தான் ஆஹாரம் கொடுக்கவேண்டும் என்று கணக்கு வைத்துக் கொள்ளவேண்டும். அதாவது அந்தக் கணக்குப்படி

தெரியவில்லையே என்று ஒருவன் சொன்னால் அவனுடைய வைராக்கியம் எப்பேர்ப்பட்டதென்பது நன்றாகத் தெரிகிறது. புதையலை எதிர்பார்த்தால் அவன் உண்மை வைராக்கியத்தை உடையவனாகமாட்டான்.

அதைப்போலவே ஸத்தியத்தினுடைய அவாந்தரப் பிரயோஜனத்தை உத்தேசித்து அதை நாம் அநுஷ்டிக்கக் கூடாது.

3. அஸ்தேயம்.

அந்நியாய ஆசை நமக்கு இருக்கக்கூடாது. அஸ்தேயம் என்றால் திருடாமல் இருப்பது என்பது அர்த்தம். மற்றவன் ஸொத்தை ஏமாற்றிப் பெறக்கூடாது. அடித்துப் பிடுங்கக் கூடாது. எல்லாவற்றையும்விடக் கடிதத்தின் மூலமாக திருடுவது மிகவும் மோசமான காரியம்.

4. சௌசம்.

சரீர சுத்தி மனசுத்தியை உண்டாக்கும். சரீர சுத்தத்திற்கு ஏற்பட்ட காரியங்கள் தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்பொழுது முப்பது அல்லது நாற்பது வருஷ காலமாக சௌசம் நமது தேசத்தில் தவறியிருக்கிறது. இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன பதார்த்தங்களைக் கொண்டு சரீரத்தைச் சுத்தி செய்துகொள்ளவேண்டும், இன்ன இன்ன பாத்திரங்களை இன்ன விதம் சுத்தம் செய்யவேண்டும் என்ற விஷயங்கள் சாஸ்திரங்களிற் காணப்படுகின்றன. சுத்தம் எல்லாவிதமான கர்மாக்களுக்கும் முதலில் அவசியம். அது தவறாமல் இருக்கவேண்டும். இப்பொழுது நாம் மறந்துபோனாலும் தெரிந்துகொண்டு அநுஷ்டானம் செய்யவேண்டும். இதைக்

கூட நாம் ஸரியாகச் செய்யாவிட்டால் மனதை எப்படி அடக்குவது ?

இதைக் காதில் கேட்டுவிட்டுப் போவதால் மட்டும் பிரயோஜனமில்லை. காரியத்திற் செய்யவேண்டும். நாம் க்ஷேமமாக இருக்கவேண்டுமாஞல் சுத்தமாக இருக்கவேண்டும். குழந்தைகள் முதற்கொண்டு விருத்தர்கள் வரையில் தங்கள் தங்களுக்கென்று ஒவ்வொரு செம்பு தனித் தனியே வைத்துக்கொள்ளவேண்டும். அதைக்கொண்டே சுத்திசெய்து கொள்ளவேண்டும். தீர்த்தபாத்திரம் தனித் தனியே வைத்துக்கொள்ளவேண்டும். மற்றவன் பாத்திரத்தில் தீர்த்தம் வாங்கிக் குடிக்கக்கூடாது. அந்த அந்த பாத்திரம் செய்யப்பட்ட லோஹத்திற்குத் தக்கபடி சொல்லப்பட்ட பதார்த்தங்களால் சுத்தி செய்யவேண்டும். வெள்ளிப் பாத்திரமென்ருல் அதற்குச் சொல்லப்பட்ட வஸ்துவால் அதைச் சுத்தி செய்யவேண்டும். தாமிரம் முதலியவைகளாஞல் அதற்கு ஏற்றபடி சுத்தி செய்யவேண்டும். எங்கே சாப்பிடப்போனாலும் நம்முடைய தீர்த்தப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு போகவேண்டும். மற்றவன் பாத்திரத்தை உபயோகிக்கக்கூடாது. இப்படி எல்லா ஜாதிகளும் செய்யவேண்டும். தங்கள் தங்கள் ஜாதிக்கேற்ற காரியங்களைச் செய்வதில் சுத்தமாக யாவரும் இருக்கவேண்டும்.

## 5. இந்திரியநிக்ரஹம்.

நம்முடைய இந்திரியங்களை அவைகளின் போக்கிலே விட்டுவிடக்கூடாது. ஒவ்வோரிந்திரியத்திற்கும் இவ்வளவு தான் ஆஹாரம் கொடுக்கவேண்டும் என்று கணக்கு வைத் துக் கொள்ளவேண்டும். அநுபவம் அந்தக் கணக்குப்படி

இருக்கவேண்டும். மீறினால் அவற்றை அடக்கும் சக்தி வேண்டும்.

இந்த ஐந்தும் ஆஸ்திகமதத்தை அநுஷ்டிப்பவர்களுக்கும் வைதிகமதத்தை உடையவர்களுக்கும் பிரதான தர்மங்கள் ஆகும். இவைகளை நாம் எல்லாரும் அநுஷ்டிக்க வேண்டும். இவைகள்தாம் முக்கியமான ஸாமான்ய தர்மங்கள்.

# 11

# "தேவாநாம்பிரியன்"

[देवानां प्रियः]

[17—10—1932]

பழைய நாளில் காஷ்மீர ராஜ்யத்தில் இருந்த அரசர்களைப் பற்றிக் கல்ஹணர் என்பவர் ராஜதரங்கிணி என்ற ஒரு கிரந்தம் எழுதியிருக்கிறார். அதில் இன்ன இன்ன அரசன் இவ்வளவு இவ்வளவு வருஷங்கள் ராஜ்ய பாரம் செய்தார் என்பதும் இன்னாருக்குப் பின் இன்னார் ராஜ்ய பாரம் செய்தாரென்பதும் எழுதப்பட்டிருக்கின்றன. அப்படியே பாகவதம், விஷ்ணு புராணம், மத்ஸ்ய புராணம், வாயு புராணம் முதலியவைகளில் அந்த அந்த யுகத்தில் உள்ள அரசர்களுடைய சரித்திரங்கள், வம்சாவளி முதலியவைகளும் பின்னால் வரப்போகிற அரசர்களைப் பற்றிய விஷயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவர்கள் இவ்வளவு இவ்வளவு காலம் இருந்தார்கள் என்பதும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தக் காலத்தில் இங்கிலீஷ்ப் பள்ளிக்கூடங்களில் சொல்லிக்கொடுக்கிற இந்தியதேச சரித்திரங்கள் இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன. அந்தப் புஸ்தகங்களில் முதலில் புத்தருடைய அவதாரம் சொல்லியிருக்கிறது. அவர் காலம் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு 477 வருஷம் (477 B. C.) என்று சொல்லுகிறார்கள். சந்திரகுப்தன் ராஜ்யத்தைப் பற்றியும் காலத்தைப் பற்றியும் சில விசாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. நம்முடைய இந்த சரித்திரத்திற்குக் கிறிஸ்துவின் பிறப்பை ஆதியாக வைத்துக்

கணக்குப் பண்ணி எழுதியிருக்கிறார்கள். சந்திரகுப்தன் இருந்தது கிறிஸ்து பிறப்பதற்கு இத்தனை வருஷங்களுக்குமுன் என்று எழுதியிருக்கிறார்கள். அதை அவர்கள் எப்படிக் கண்டுபிடிக்கிறார்கள்? முன் பின் கணக்கை வைத்துக்கொண்டு இப்படித்தான் இருக்கவேண்டும் என்று நிச்சயிக்கிறார்கள். முத்ராராக்ஷஸம் என்னும் ஸம்ஸ்கிருத நாடகத்தில் சந்திரகுப்தன், நவநந்தர்கள் என்பவர்கள் சொல்லப்படுகிறார்கள். சந்திரகுப்தன் காலத்தில் யவன தேசத்திலிருந்து ஒரு யாத்திரை செய்கிறவர் வந்தார். அவர் எழுதிவைத்த குறிப்பில் அந்தக் காலம் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் சந்திரகுப்தன் காலம் தெரிகிறது. அவன் காலம் தெரிந்ததனால் நவநந்தர்களுடைய காலமும் அவர்களோடு ஸம்பந்தப்பட்டவர்களுடைய காலங்களும் தெரியவருகின்றன. இப்படிக் கணக்குப் பண்ணிச் சில உத்தேசங்களையும் கலந்து சரித்திரம் எழுதியிருக்கிறார்கள். அந்தச் சரித்திரத்தை நாம் அப்படியே நம்புகிறோம். என்ன காரணத்தால் இந்தக் காலத்தைக் கண்டுபிடித்தார்கள் என்பதை நாம் அறிந்துகொள்வதில்லை. சரித்திர உபாத்தியாயருக்கு அந்தக் காரணங்கள் தெரியுமோ தெரியாதோ; அவருக்கும் முழுவதும் தெரியாது; புஸ்தகத்தைப் பார்க்கவேண்டுமென்று சொல்லிவிடுவார்.

அவர்கள் எழுதியவைகளைக் காரணம் கேட்காமல் நம்புகிறோம். அவர்களோ நம்முடைய கதைகளைத் தப்பு என்கிறார்கள். என்ன காரணத்தால் அப்படிச் சொல்லுகிறார்கள் என்பதையும் நாம் அறிந்துகொள்வதில்லை. நம்முடைய விஷ்ணு புராணத்தை மாற்றவேண்டும்; கல்ஹணர் எழுதியதை மாற்றவேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அவர்களோ ஏதோ ஒன்றை ஆதாரமாக வைத்துக்

கொண்டு அதற்குமேல் கணக்குப் பண்ணிக்கொண்டு வரு-
கிறார்கள். ஆதாரமே தப்பாகப் போய்விட்டால் அப்புறம்
எல்லாம் தப்பாய்விடும். ஆகையால் நாம் நமது தேசசரித்-
திரங்களைத் தெரிந்துகொள்ளும்பொழுது காலநிர்ணயங்-
களின் காரணத்தையும் கேட்கவேண்டும்.

புராணமெல்லாம் பொய் என்று அவர்கள் சொல்லு-
கிறார்கள். நம்மவர்களிற் சிலர் அவர்கள் சொல்லியிருக்கிற
வைகளில் இன்னது இன்னது தப்பு என்று எடுத்துக்
காட்டுகிறார்கள். அவர்கள் சொல்லுவதை நாம் மனதில்
வாங்கிக்கொள்ளவேண்டும். காரணத்தைத் தெரிந்து
கொள்ளவேண்டும்.

அவர்கள் எழுதிய சரித்திரத்தில் அசோகன் என்று
ஒரு அரசனைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்-
கிருதம் படித்தவர்களுக்கு அவனைத் தெரியாது. அவர்-
களுக்குப் புத்தரைத் தெரியும். தசாவதாரங்களுக்குள்
புத்தாவதாரத்தையும் ஒன்றாகச் சொல்லும் ஸம்பிர-
தாயத்தால் அவரைத் தெரியும். முத்ராராக்ஷஸத்தால் சந்திர-
குப்தனைப்பற்றித் தெரியும். அசோகனைப்பற்றித் தெரி-
யாது.

சரித்திரக்காரர்கள் அசோகனை எப்படித் தெரிந்து
கொண்டார்கள்? அசோகன் காலத்துச் சிலாசாஸனங்கள்
சில அச்சில் வெளியாகி இருக்கின்றன. பழைய காலத்தில்
அசோகன் அங்கங்கே ஸ்தம்பங்கள் நட்டுவைத்திருக்கிறான்.
அந்த ஸ்தம்பங்கள் சில அகப்பட்டன. அவைகளில் எழுத்து
எழுதப்பட்டிருக்கிறது. அது எழுதப்பட்ட பாஷை பிராக்-
கிருதம் என்பதாகும். நாம் பேசும் தமிழ் வேறு; எழுதும்
தமிழ் வேறு; அதைப்போல ஸம்ஸ்கிருதத்தின் அபப்ரம்சம்

கணக்குப் பண்ணி எழுதியிருக்கிறார்கள். சந்திரகுப்தன் இருந்தது கிறிஸ்து பிறப்பதற்கு இத்தனை வருஷங்களுக்கு முன் என்று எழுதியிருக்கிறார்கள். அதை அவர்கள் எப்படிக் கண்டுபிடிக்கிறார்கள்? முன் பின் கணக்கை வைத்துக்கொண்டு இப்படித்தான் இருக்கவேண்டும் என்று நிச்சயிக்கிறார்கள். முத்ராராக்ஷஸம் என்னும் ஸம்ஸ்கிருத நாடகத்தில் சந்திரகுப்தன், நவநந்தர்கள் என்பவர்கள் சொல்லப்படுகிறார்கள். சந்திரகுப்தன் காலத்தில் யவன தேசத்திலிருந்து ஒரு யாத்திரை செய்கிறவர் வந்தார். அவர் எழுதிவைத்த குறிப்பில் அந்தக் காலம் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் சந்திரகுப்தன் காலம் தெரிகிறது. அவன் காலம் தெரிந்ததனால் நவநந்தர்களுடைய காலமும் அவர்களோடு ஸம்பந்தப்பட்டவர்களுடைய காலங்களும் தெரியவருகின்றன. இப்படிக் கணக்குப் பண்ணிச் சில உத்தேசங்களையும் கலந்து சரித்திரம் எழுதியிருக்கிறார்கள். அந்தச் சரித்திரத்தை நாம் அப்படியே நம்புகிறோம். என்ன காரணத்தால் இந்தக் காலத்தைக் கண்டுபிடித்தார்கள் என்பதை நாம் அறிந்துகொள்வதில்லை. சரித்திர உபாத்தியாயருக்கே அந்தக் காரணங்கள் தெரியுமோ தெரியாதோ; அவருக்கும் முழுவதும் தெரியாது; புஸ்தகத்தைப் பார்க்கவேண்டுமென்று சொல்லிவிடுவார்.

அவர்கள் எழுதியவைகளைக் காரணம் கேட்காமல் நம்புகிறோம். அவர்களோ நம்முடைய கதைகளைத் தப்பு என்கிறார்கள். என்ன காரணத்தால் அப்படிச் சொல்லுகிறார்கள் என்பதையும் நாம் அறிந்துகொள்வதில்லை. நம்முடைய விஷ்ணு புராணத்தை மாற்றவேண்டும்; கல்ஹணர் எழுதியதை மாற்றவேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அவர்களோ எதோ ஒன்றை ஆதாரமாக வைத்துக்

கொண்டு அதற்குமேல் கணக்குப் பண்ணிக்கொண்டு வருகிறார்கள். ஆதாரமே தப்பாகப் போய்விட்டால் அப்புறம் எல்லாம் தப்பாய்விடும். ஆகையால் நாம் நமது தேச சரித்திரங்களைத் தெரிந்துகொள்ளும்பொழுது கால நிர்ணயங்களின் காரணத்தையும் கேட்கவேண்டும்.

புராணமெல்லாம் பொய் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். நம்மவர்களிற் சிலர் அவர்கள் சொல்லியிருக்கிறவைகளில் இன்னது இன்னது தப்பு என்று எடுத்துக் காட்டுகிறார்கள். அவர்கள் சொல்லுவதை நாம் மனதில் வாங்கிக்கொள்ளவேண்டும். காரணத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

அவர்கள் எழுதிய சரித்திரத்தில் அசோகன் என்ற ஒரு அரசனைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்கிருதம் படித்தவர்களுக்கு அவனைத் தெரியாது. அவர்களுக்குப் புத்தரைத் தெரியும். தசாவதாரங்களுக்குள் புத்தாவதாரத்தையும் ஒன்றாகச் சொல்லும் ஒரு ஸம்பிரதாயத்தால் அவரைத் தெரியும். முத்ராராக்ஷஸத்தால் சந்திரகுப்தனைப்பற்றித் தெரியும். அசோகனைப்பற்றித் தெரியாது.

சரித்திரக்காரர்கள் அசோகனை எப்படித் தெரிந்து கொண்டார்கள் ? அசோகன் காலத்துச் சிலா சாஸனங்கள் சில அச்சில் வெளியாகி இருக்கின்றன. பழைய காலத்தில் அசோகன் அங்கங்கே ஸ்தம்பங்கள் நட்டுவைத்திருக்கிறான். அந்த ஸ்தம்பங்கள் சில அகப்பட்டன. அவைகளில் ஏதோ எழுதப்பட்டிருக்கிறது. அது எழுதப்பட்ட பாஷை பிராகிருதம் என்பதாகும். நாம் பேசும் தமிழ் வேறு; எழுதும் தமிழ் வேறு; அதைப்போல ஸம்ஸ்கிருதத்தின் அபப்ரம்சம்

பிராகிருதம். அந்தப் பிராகிருதத்தில் மகத தேசத்தில் வழங்கியது மாகத பிராகிருதம். அது மாகதி என்று சொல்லப்படும். அந்த மாகதியின் அபப்ரம்சம் பாலி. இப்பொழுது ஸிங்கள (Ceylon) தேசத்தில் பாலி பாஷை இருந்துவருகிறது. மாகதியில் அசோகனுடைய சாஸனங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

அசோகன் பௌத்தனென்று சொல்லுகிறார்கள். ஆனால் அவன் வைதிகதர்மங்களை மாற்றினவனாகத் தெரியவில்லை. அந்தக் காலத்தில் யாவரும் வர்ணாச்ரம தர்மங்களைத் தவறாமல் அநுஷ்டித்து வந்தார்கள். பௌத்த பிக்ஷுக்கள்மாத்திரம் சில வித்தியாஸம் உடையவர்களாக இருந்தார்கள். கிரஹஸ்தர்கள் வேதபாஹ்யர்களாக இருந்ததாகத் தெரியவில்லை. பௌத்தர்கள் செய்த கிரந்தங்களில் வேதமார்க்க தெய்வ ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. பௌத்தர் ஒருவரே தாம் எழுதிய ஒரு புஸ்தகத்தில் ஸரஸ்வதி ஸ்தோத்திரமும் வேறொன்றில் புத்த ஸ்தோத்திரமும் மற்றொன்றில் சிவ ஸ்தோத்திரமும் சொல்லியிருக்கிறார். பௌத்தமதஸம்பிரதாயத்திலும் வர்ண தர்மங்களை அநுஷ்டித்தார்கள். ஸ்ரீஹர்ஷன் பில்ஹணன் முதலியவர்களுடைய கிரந்தங்களைப் பார்த்தால் அப்படித்தான் தெரியவருகிறது.

அசோகனுடைய சாஸனங்களில் அவனுடைய பெயர் அசோகனென்று சொல்லப்படவில்லை. "தேவானும் பியஸ்ஸ" என்று அவனுடைய பேர் எழுதப்பட்டிருக்கிறது. 'தேவானாம்ப்ரியஸ்ய' என்பதுதான் அப்படி மாறிவந்தது. சில வெள்ளைக்காரர்கள் நம்முடைய சாஸ்திரங்களை வாசித்திருக்கிறார்கள். அவர்கள் அதற்குத் தேவர்களுக்குப் பிரியமானவன் என்று அர்த்தம் சொல்லுகிறார்கள். பாணினீயம் என்ற ஒரு வியாகரண சாஸ்திரம் இருக்கிறது. அதில்

தேவானும்ப்ரியன் என்பதற்கு அசடு அல்லது மூர்க்கன் என்று அர்த்தம் எழுதப்பட்டிருக்கிறது. ஒரு பெரிய அரசனை அசடு என்று யாராவது எழுதுவார்களா?

சாஸனத்தையும் பாணினீயத்தையும் பார்த்த சில வெள்ளைக்காரர்கள் ஓர் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறார்கள். "தேவானும்ப்ரிய:" என்பது முதலில் நல்ல அர்த்தத்தில் தான் உபயோகப்பட்டுவந்தது; வைதிகர்கள் தங்களிலும் வேறான பௌத்தர்களைத் தூஷிப்பதற்காக அதற்குக் கெட்ட அர்த்தத்தைக் கற்பித்துக்கொண்டார்கள்" என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அந்தக் கெட்ட அர்த்தத்தைப் பாணினி எழுதினாராம். அசோகன் சில காலத்திற்கு முன் இருந்தவன். பாணினி அவனுக்கு எவ்வளவோ காலத்துக்கு முந்தி இருந்தவர். இதைப் பார்த்து அவர் வியாகரணத்திற் சொன்னாரென்பது அஸம்பாவிதம். அப்படியானால் இந்த 'தேவானும்ப்ரிய:' என்னும் வார்த்தைக்கு என்னதான் அர்த்தம் என்பதைப் பார்க்கலாம்.

ஸ்ரீமத் சங்கராசார்யாள் தாம் செய்த பிரஹ்ம ஸூத்திரபாஷ்யத்தில் ஓரிடத்தில் இந்தப் பெயரை உபயோகப் படுத்தியிருக்கிறார்கள்.

इदं तावद्देवानांप्रियः प्रष्टव्यः ।

என்ற இடத்தில் 'தேவானும்ப்ரிய:' என்பது வந்திருக்கிறது. பாஷ்யத்தில் ஓரிடத்தில் ஜீவனைப் பற்றிச் சொல்லப்படுகிறது. அங்கே உள்ளவற்றை அநுஸரித்து 'பரமாத்மா மாதிரி ஜீவன் ஆகமாட்டான்' என்று எழுதியிருக்கிறார்கள். கேட்டுக்கொண்டு வந்தவன் "அப்படியானால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறு வேறா?" என்று ஓர் ஆக்ஷேபணை செய்கிறான். அதற்குப் பதில் சொல்ல ஆரம்பிக்கையில் முதலில், 'நீ என்ன ரொம்ப அசடா

யிருக்கிறாயே !' என்று சொல்லுகிறார். அங்கே "தேவானும்ப்ரிய:" என்று சொல்லுகிறார். அவருடைய அபிப்பிராயம் என்ன? ஜீவாத்மா வேறு பரமாத்மா வேறு என்று நினைத்தவனைப் பார்த்து அவ்வாறு சொல்லுகிறார். ஆகவே பாஷ்யத்தில் ஜீவாத்ம பரமாத்ம பேதம் நினைப்பவனுக்கு அந்தப் பேர் சொல்லப்படுகிறது. பாணினீயத்தில் மூர்க்கனென்று எழுதியிருக்கிறது. சிலாசாஸனத் தூண்களில் அந்தப் பேர் இருக்கிறது. அந்த மூன்றுக்கும் என்ன ஸம்பந்தம் ?

வேதத்தை ஆக்ஷேபித்துப் பௌத்தர்கள் வாதம் செய்வதுண்டு. அதனால் அவர்களுடைய மதம் அவைதிக மதமாகும். அவர்கள் ஆத்ம பரமாத்ம பேதம் சொல்பவர்கள். அதனால் அந்தப் பேர் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதாக நினைக்கலாம். "தேவானாம்ப்ரிய:" என்று ஏன் அவர்களை அழைக்கிறார்கள் ? ஆத்ம பரமாத்ம பேதம் கற்பிப்பவனை ஏன் அப்படி அழைக்கவேண்டும் ?

பாஷ்யத்தில் உள்ளதற்கும் வியாகரணத்தில் உள்ளதற்கும் மூலம் ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் இருக்கிறது. அது வேதம். அந்த உபநிஷத்தில்தான் ஜநகமஹாராஜாவைப் பற்றியும் யாஜ்ஞவல்க்யர், கார்க்கி, மைத்ரேயி என்பவர்களைப்பற்றியும் சொல்லப்படுகிறது.

அதில் ஒரு வாக்கியம் இருக்கிறது.

'तस्मात् एषां तन्न प्रियं यदेतन्मनुष्या विद्युः'

அதனுடைய விஷயத்தைச் சொல்லுகிறேன். அவர்களுக்கு இது பிரியமில்லை. எது பிரியமில்லை ? மனிதர்களாகப் பிறந்தவர்கள் அறிந்துகொள்வது அவர்களுக்குப் பிரியமில்லை. அதாவது ஞானம் வந்துவிடுவது பிரியமில்லை.

அதற்குக் காரணம் இருக்கிறது. யாருக்குப் பிரிய மில்லை? ஏன் பிரியமில்லை?

நம்முடைய வீட்டு வேலைக்காரன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு ஸ்வல்ப சம்பளம் கொடுத்து வருகிறோம். வேறு வேலைக்காரன் வந்தால் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டும். நமது வேலைக்காரன் மேலே பரீக்ஷைகளில் தேறி விருத்தியாக எண்ணுகிறான். பரீக்ஷைக்குப் போகிறான். நாம் அவன் பரீக்ஷையில் தேறவேண்டுமென்று நினைப்போமா? மாட்டோம். தேறக் கூடாதென்றுதான் நினைப்போம். தேறிவிட்டால் அவனுக்குக் கௌரவம் வந்து விடும், வேறு வேலைக்கு அவன் போய்விடுவான். அவன் போய்விட்டால் அவனைப்போல் ஸ்வல்ப சம்பளத்தில் ஒரு வேலைக்காரனும் கிடைக்கமாட்டான். இதைப் போலத் தான் இங்கேயும் இருக்கிறது.

உபநிஷத் என்ன சொல்லுகிறது பார்ப்போம்.

'एवं स देवानाम्'

தேவதைகளுக்குப் பிரியமில்லை. ஆகையால் தேவர்களுக்குப் பிரியமானவன் அறியாதவன். அதனால்தான் மூர்க்கன் என்று வியாகரணத்தில் எழுதியிருக்கிறது. வேதத்தில் இப்படி மூலம் இருக்கிறது. இது வியாகரணத்தில் மூர்க்கன் என்று சொல்லப்படுகிறது. எப்படி இந்தப் பேர் தூணிலுள்ள சாஸனங்களில் வந்தது?

ஜோஸ்யம், மந்த்ரம், ஆகமம், வைத்தியம் முதலிய சாஸ்திரங்கள் எழுதிய பழைய ஏட்டில் பாஷை அபத்தம் அதிகமாக இருக்கும். சைவம், சாக்தம், வைஷ்ணவம், பௌத்தம், ஆர்ஹதம் என்று ஆகமங்கள் ஐந்து விதம்.

இவற்றில் பாஷை அபத்தம் இருக்கும். வியாகரணப்படி அவை இருப்பதில்லை.

அந்தக் காலத்தில் சில்பிகள் இந்தப் பேரை யாராவது சொல்லக் கேட்டிருப்பார்கள். இது நல்ல அர்த்தமாக இருக்கிறதே என்று எழுதியிருக்கலாம். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறு என்று கருதுவதனால் இந்தப் பேர் பௌத்த அரசனுக்கு வந்தது. இவ்வளவு விஷயங்களையும் ஸம்பந்தப்படுத்திப் பார்த்தால்தான் உண்மை வெளியாகிறது. இவற்றை முறைப்படி தெரிந்துகொள்ளாத தேசாந்தரஸ்தர்களெல்லாம் இது தப்பு, அது தப்பு என்று சொல்லிவிடுகிறார்கள். அவர்கள் நம்முடைய விஷயங்கள் தெரியாதவர்கள்.

தேவதைகளுக்கு என் பிரியமில்லை? அறிவையுடையவனை ஏன் அவர்கள் விரும்புவதில்லை. அறிவு என்றால் என்ன? எந்த அறிவு அவர்களுக்குப் பிரியமில்லை? எப்படி இருந்தால் பிரியம்?

அந்த உபநிஷத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது.

अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति । न स वेद यथा पशुः, एवं स देवानाम् । [ப்ருஹதாரண்யகோபநிஷத்]

யார் பசு?

பரமசிவனுக்குப் பசுபதீசுவரர் என்பது ஒரு பெயர்.

वयं तु पशवोऽस्माकं त्वमेव पतिरीश्वरः ।

என்று ஓரிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. "நாங்களெல்லாம் பசுக்கள்; நீதான் பதி" என்பது அதன் அர்த்தம். நாமெல்லாம் பசுவா? நம்மைக் கட்டிப்போடுகிறாரா? ஆம்,

நாம் ஸ்வதந்திரமான மனிதர்களாக இருந்தால் பசுவாக மாட்டோம். நாம் ஜயிலில் இருக்கிறோம். ஜயிலில் போடப் பட்டவர்கள் இஷ்டப்படி நடக்க முடியாது. அவர்கள் இஷ்டப்படி நடக்கக் கூடாதென்பதற்காகத்தான் ஜயிலில் போடுகிறார்கள். ஒருவன் திருடினானென்று சிறைசெய்கிறார்கள். ஒருவனை அடித்தானென்று அடிக்கிறார்கள். அவன் அடித்தது நியாயமல்லாவிட்டால் அவனை அடிப்பதுமட்டும் நியாயமாகுமா? அவன் அடிப்பது ஒன்று; அதற்காக அவனை அடிப்பது ஒன்று. ஆக ஓர் அடியை இரண்டு அடி ஆக்கலாமா? அவனை எதற்காக அடிக்கிறார்கள். அவன் ஒருவனை அடித்ததற்காக அல்ல. மேலும் ஒருவனை யும் அடிக்கக்கூடாது என்பதற்காக. அந்தப் பிராணியை ஸ்வயேச்சையாகவிடக்கூடாது. நல்ல எண்ணமுடையவர் கள் இச்சைப்படி இருக்கிறார்கள். குழந்தையை நாம் கட் டிப்போடுகிறோம். அதனுடைய இச்சைப்படி விட்டுவிட் டால் உபத்திரவம் உண்டாகிறது. அது உபத்திரவம் பண் ணுமல் இருக்கும் பருவத்தை அடைந்துவிட்டால் கட்டிப் போடுவதில்லை. மாட்டை இஷ்டப்படி விட்டுவிட்டால் வயலில் போய் மேயும், கிணற்றில் விழுந்துவிடும். அதனால் தான் நாம் அதைக் கட்டிப்போடுகிறோம்.

நாம் பசுவைப்போல் இருக்கிறோம். நம்முடைய இஷ் டப்படி நம்மை விட்டுவிட்டால், நமக்கு வியாதி வரக்கூடாது, உபத்திரவம் இருக்கக்கூடாது, வேறு ஒருவனுக்குச் சொத்து இருக்கக்கூடாது, மற்றொருவன் ஸௌகப்படக்கூடாது என் போம். ஊருக்கே அனர்த்தம். ஆகையால்தான் நம்மை ஒரு வன் கட்டிப்போட்டிருக்கிறான். கட்டினதால் நமக்குத்தான் க்ஷேமம். மாட்டைக் கட்டாவிட்டால் பிறருடைய வயல் களில் மேய்ந்து பட்டியில் அடைபட்டுக் கஷ்டப்படும். ஆத

னுடைய க்ஷேமத்துக்காகத்தான் அதைக் கட்டிப்போடுகி றோம். நம்முடைய க்ஷேமத்துக்காகவும் நாமே நமக்கு அதிக உபத்திரவத்தை உண்டாக்கிக் கொள்ளாமலிருப்பதற்காக வும் பகவான் நம்மைக் கட்டிப்போட்டிருக்கிறார்.

"எப்பொழுது அவிழ்த்து விடுவீர்" என்று அவரைக் கேட்டால், "ஒருவருக்கும் ஒன்றும் பண்ணாமல் இருந்தால் அவிழ்த்துவிடுவேன்" என்று அவர் சொல்லுகிறார்.

மனிதனைக் கட்டிப்போடாவிட்டால் அவனுடைய ஆசைக்கு அளவிருக்காது. மேலும் மேலும் துன்பத்தைச் சுமத்திக்கொள்வான். இன்னும் ஒரு மார்ஸும் (Mars) ஜுபிடரும் (Jupiter) இருக்கின்றனவா என்று தேடுவான். அவனுடைய ஆசைக்கு இந்த ஸ்ருஷ்டி எல்லாவற்றையும் ஆஹுதி பண்ணினாலும் போதாது. ஒருவனுடைய ஆசைக்கே இவ்வளவு லோகங்களும் வேண்டும். அப் பொழுது பலபேருக்கும் இதைப்போலப் பல ஸ்ருஷ்டி பண்ணிக்கொண்டே இருக்கவேண்டும். இது முடியாது. ஆகையினால்தான் கர்மபந்தத்தால் கட்டிப்போட்டார்.

பிறருக்கு நாம் ஏன் துன்பம் செய்கிறோம்? நமக்கு ஒரு வஸ்து வேண்டுமென்றால் அதற்காக மற்றவர்களுக்கு உபத் திரவம் செய்கிறோம். வேண்டும் என்று நமக்குத் தோன்று மற்போனால் நம்மால் மற்றவர்களுக்குத் துன்பம் இல்லை. ஆகையால் ஆசையினாலேதான் மற்றவர்களுக்கு துன்பத்தை உண்டாக்குகிறோம். எப்பொழுது நாம் ஆசையை விட் டோமோ அப்பொழுது அவிழ்த்து விடப்படுவோம். குழந் தையை எந்த விஷமத்துக்காகக் கட்டிப்போடுகிறோமோ அந்த விஷமம் அதனிடம் இல்லாமற்போனால் அவிழ்த்து விட்டுவிடுகிறோம். நம்மிடத்தில் உள்ள ஆசையென்னும்

விஷமம் போய்விட்டால் ஈசுவரனும் நம்மை அவிழ்த்து விட்டு விடுவார். ஆகையால் ஆசையென்னும் விஷமம் போகவேண்டும்.

நாமெல்லாம் பசுபதியின் குழந்தைகள். விஷமம் செய்யும் ஸ்வபாவம் உடையவர்கள். நம்மை அவர் கட்டியிருக்கிறார்.

चिरं जीवन्नेव क्षपितपशुपाशव्यतिकरः
परानन्दाभिख्यं रसयति रसं त्वद्भजनवान् ॥
[ஸௌந்தர்யலஹரீ, 19]

என்பது ஸௌந்தர்யலஹரி.

அந்தக் கட்டிற்குப் பாசம் என்று பெயர். பசு, பதி, பாசம் என்ற மூன்றையும் ஜீவன், பரமாத்மா, மாயை என்று அத்வைதமதம் சொல்லும். பசு, பதி, பாசம் என்று சைவ சாஸ்திரங்களும் சாக்தசாஸ்திரங்களும் சொல்லும்.

எப்போப்பட்ட நாம் பசு? யார் பசு இல்லை? பசுபதி பசு இல்லை. பதி பசுவைக் கட்டுவான். நாம் எப்பொழுது பசுவாய் இல்லாமல் ஆவோம். நாமே பதியாக ஆய்விட்டால் நாம் பசுவில்லை. அப்பொழுது கட்டு அவிழ்த்துவிடப்படும். வேறு ஒரு தேவதையை ஒருவன் உபாஸித்தால் அவன் அறிந்தவனல்ல; பசுப்போல் உள்ளவன் என்று சுருதி சொல்லுகிறது. பசு எப்படி அறியாததோ அதுபோல அவனும் அறியாதவன். வீரமாக உபாஸனை பண்ணுகிற வீரசைவர்கள், வைஷ்ணவர்கள் முதலியவர்கள் இருந்து, 'தன்னுடைய உபாஸனைதெய்வத்தைத் தவிரத் தேவதாந்தர உபாஸனை செய்பவன் அறியாதவன்' என்று அர்த்தம் சொல்லுவார்கள். அது தவறு. இந்த வாக்கியத்துக்கு அப்படி அர்த்தம் பண்ணக்கூடாது.

'देवताम् अन्याम् उपास्ते'

தேவதையை யார் வேருக உபாஸிக்கிருனே என்று அர்த்தம் பண்ணவேண்டும். தெய்வம் வேறு நான் வேறு என்று எவன் உபாஸிக்கிருனே அவன் பசு. அந்தத் தெய்வமே நான் என்று அறிந்தவன் பசு இல்லை. உபாஸகன் யார்? ஜீவாத்மா. பசு தேவதைகளுக்குப் பிரியமானவன். அதனுல் ஈசுவரன் வேறு ஆத்மா வேறு என்று நினைக்கும் அறியாதவனைத் 'தேவானும்ப்ரிய:' என்று சொன்னார்கள்.

வாஸ்தவத்தில் வேருக இல்லாமல், வேறு என்று நினைத்தால் அவன் அறிந்தவன் இல்லை அல்லவா? ஒரு விளக்குக்கு ஐந்து முகம் இருக்கின்றன. ஆறு என்று நினைப்பவன் அறிந்தவன் இல்லை. நான் வேறு தெய்வம் வேறு என்று நினைப்பவனும் அப்படியே அறிந்தவன் இல்லை.

பரமாத்மா நான் என்று நினைப்பவன் குடும்பத்தில் வேலை செய்யமாட்டான். அவனுக்கு உடம்புக்கு ஏதோ வந்துவிட்டதே என்று இந்தக் காலத்தில் நினைப்பார்கள். முன் நாளில் எல்லோரும் தேவதைகளுக்கு வேண்டிய கர்மாக்களைச் செய்துகொண்டிருப்பார்கள். ஞானம் வந்துவிட்டால் அவைகளை நிறுத்திவிடுவார்கள். இந்தக் காலத்தில் ஒன்றுமே இல்லை. எப்பொழுதுமே நிறுத்தி இருக்கிருர்கள்.

ஒருவன் ஞானியாகிவிட்டால் அவன் தேவர்களுக்கு உரிய காரியங்களை நிறுத்திவிடுவான். இவன் ஞானியாய் விட்டால் நமக்கு ஒன்றும் கிடைக்காதே என்று தேவதைகள் பிரதிபந்தங்கள் செய்வார்கள்.

ஞானியாகும் வரையில் தேவதைகளுக்குரிய கர்மாக்களைச் செய்து கொண்டிருக்கிருன். அதற்காக அவர்கள்

மனிதனுக்கு நல்லது பண்ணுகிறார்கள். மழை பெய்யச் செய்கிறார்கள். அதற்காக ஹவிர்ப்பாகம் கொடுக்கவேண்டும். நமக்கு இந்த உலகத்தில் ஒருவர் ஓர் உபகாரம் செய்தால் பிரதி உபகாரம் செய்யவேண்டுமல்லவா? அதைப் போல் மழைக்கும் செய்யவேண்டும். அதற்காகத்தான் யக்ஞம் செய்கிறோம். யாராவது ஒரு பிராம்மணர் தேவதைகளுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்கிறார். அவர் எல்லாருக்கும் பிரதிநிதியாக இருந்து கொடுக்கிறார். யாராவது ஒருவர் வரி கொடுப்பதைப்போல அவர் கொடுக்கிறார்.

ஆகவே ஞானியாகும் வரைக்கும் மனிதன் தேவதைகளுக்குப் பிரியமான கர்மாக்களைச் செய்கிறான். அவர்களுக்குப் பிரியமானவனாக இருக்கிறான். மாடு கறந்து பால் பெற்றுக்கொள்வதுபோலத் தேவர்கள் அவன் மூலம் லாபத்தை அடைகிறார்கள். மேலே சொன்ன சுருதியில் பசு என்பதற்கு இரண்டு அர்த்தமும் பொருந்தும். முதலில் ஜீவனென்றும் பின்பு பசுமாடென்றும் அர்த்தம் சொல்லவேண்டும்.

नालीकासनमीश्वरः शिखरिणां तत्कन्धरोत्थायिनो
गन्धर्वाः पुनरेतदध्वपथिकौ चक्रे च तद्धारकः ।
पत्री तत्प्रभुवैरिणां परिवृढो जीवा च यस्याभव-
ज्जीवान्ते वसतां रिपुक्षयविधौ देवाय तस्मै नमः ॥

[ந்யாயரக்ஷாமணியில் எடுத்துக்காட்டப்பட்டது]

என்று ஒரு சுலோகம் இருக்கிறது. இதில் நாலீகாஸனம் முதலிய பதங்கள் சிலேடையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. முதலில் நாலீகாஸனம் என்பதற்கு [illegible] என்று

'देवताम् अन्याम् उपास्ते'

தேவதையை யார் வேருக உபாஸிக்கிருனே என்று அர்த்தம் பண்ணவேண்டும். தெய்வம் வேறு நான் வேறு என்று எவன் உபாஸிக்கிருனே அவன் பசு. அந்தத் தெய்வமே நான் என்று அறிந்தவன் பசு இல்லை. உபாஸகன் யார்? ஜீவாத்மா. பசு தேவதைகளுக்குப் பிரியமானவன். அதனல் ஈசுவரன் வேறு ஆத்மா வேறு என்று நினைக்கும் அறியாதவனைத் 'தேவானும்ப்ரிய:' என்று சொன்னர்கள்.

வாஸ்தவத்தில் வேருக இல்லாமல், வேறு என்று நினைத்தால் அவன் அறிந்தவன் இல்லை அல்லவா? ஒரு விளக்குக்கு ஐந்து முகம் இருக்கின்றன. ஆறு என்று நினைப்பவன் அறிந்தவன் இல்லை. நான் வேறு தெய்வம் வேறு என்று நினைப்பவனும் அப்படியே அறிந்தவன் இல்லை.

பரமாத்மா நான் என்று நினைப்பவன் குடும்பத்தில் வேலை செய்யமாட்டான். அவனுக்கு உடம்புக்கு ஏதோ வந்துவிட்டதே என்று இந்தக் காலத்தில் நினைப்பார்கள். முன் நாளில் எல்லோரும் தேவதைகளுக்கு வேண்டிய கர்மாக்களைச் செய்துகொண்டிருப்பார்கள். ஞானம் வந்துவிட்டால் அவைகளை நிறுத்திவிடுவார்கள். இந்தக் காலத்தில் ஒன்றுமே இல்லை. எப்பொழுதுமே நிறுத்தி இருக்கிருர்கள்.

ஒருவன் ஞானியாகிவிட்டால் அவன் தேவர்களுக்கு உரிய காரியங்களை நிறுத்திவிடுவான். இவன் ஞானியாய்விட்டால் நமக்கு ஒன்றும் கிடைக்காதே என்று தேவதைகள் பிரதிபந்தங்கள் செய்வார்கள்.

ஞானியாகும் வரையில் தேவதைகளுக்குரிய கர்மாக்களைச் செய்து கொண்டிருக்கிருன். அதற்காக அவர்கள்

மனிதனுக்கு நல்லது பண்ணுகிறார்கள். மழை பெய்யச் செய்கிறார்கள். அதற்காக ஹவிர்ப்பாகம் கொடுக்கவேண்டும். நமக்கு இந்த உலகத்தில் ஒருவர் ஓர் உபகாரம் செய்தால் பிரதி உபகாரம் செய்யவேண்டுமல்லவா? அதைப் போல் மழைக்கும் செய்யவேண்டும். அதற்காகத்தான் யாகமும் செய்கிறோம். யாராவது ஒரு பிராம்மணர் தேவதைகளுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்கிறார். அவர் எல்லோருக்கும் பிரதிநிதியாக இருந்து கொடுக்கிறார். யாராவது ஒருவர் வரி கொடுப்பதைப்போல அவர் கொடுக்கிறார்.

ஆகவே ஞானியாகும் வரைக்கும் மனிதன் தேவதைகளுக்குப் பிரியமான கர்மாக்களைச் செய்கிறான். அவர்களுக்குப் பிரியமானவனாக இருக்கிறான். மாடு கறந்து பால் பெற்றுக்கொள்வதுபோலத் தேவர்கள் அவனால் லாபத்தை அடைகிறார்கள். மேலே சொன்ன சுருதியில் பசு என்பதற்கு இரண்டு அர்த்தமும் பொருந்தும். முதலில் ஜீவனென்றும் பின்பு பசுமாடென்றும் அர்த்தம் சொல்லவேண்டும்.

नालीकासनमीश्वरः शिखरिणां तत्कन्धरोत्थायिनो
गन्धर्वाः पुनरेतदध्वपथिकौ चक्रे च तद्धारकः ।
पत्री तत्प्रभुवैरिणां परिवृढो जीवा च यस्याभव-
ज्जीवान्ते वसतां रिपुक्षयविधौ देवाय तस्मै ममः ॥

[ந்யாயரக்ஷாமணியில் எடுத்துக்காட்டப்பட்டது]

என்று ஒரு சுலோகம் இருக்கிறது. இதில் நாலீகாஸனம் முதலிய பதங்கள் சிலேடையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. முதலில் நாலீகாஸனம் என்பதற்கு தனுஸ் என்று

அர்த்தம் செய்யவேண்டும். மறுபடி "தத்" என்றதனால் அதற்குக் கமலாஸனனென்று அர்த்தம் கொள்ளவேண்டும். அப்படியே கந்தர்வன் என்பதற்கு முதலில் குதிரையென்றும் பின்பு கந்தர்வனென்றும் அர்த்தம் சொல்லவேண்டும். இவைகளைப்போல இங்கே இந்த வாக்கியத்தில் ஏவம் என்றதனால் பசுவையே சொன்னதாகச் சொல்லவேண்டும்.

மாடு கறப்பது இல்லையானால் அந்த மாட்டால் மனிதனுக்கு என்ன பிரயோஜனம்? அதுபோல மனிதன் பசுவைப்போல் இருக்கிறவரையிலும் தேவதைகள் அவன்மேல் பிரியமாக இருப்பார்கள். பசுவாயில்லாமற் போனால் வெறுப்பார்கள்; உபத்திரவப் படுத்துவார்கள். நான் அவனை உபாஸிக்கிறேன் என்கிற வரையிலும் அவன் அறியாதவனாக இருக்கிறான். தேவதைகளுக்குப் பசுவாக இருக்கின்றான். அவன் வேறல்ல நாம் வேறல்ல என்று எண்ணுவதே அறிவு.

न स वेद।

என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது. அவன் அறிவதில்லை என்று சொல்லியிருக்கிறது. அவன் உபாஸகன் அல்ல என்று சொல்லவில்லை. வேதனம் வேறு, உபாஸனம் வேறு. அவன் உபாஸிக்கிறவன்தான். அதில் ஆக்ஷேபணை இல்லை.

இந்தக் காலத்தில் நாம் பசுக்களாக இருக்கிறோம். ஆனால் தேவதைகளுக்குப் பிரியமாக இருக்கவில்லை. கர்மாக்களைச் செய்வதில்லை. நரகத்தில் இருப்பவர்களுக்குத்தான் பிரியமாக இருக்கிறோம். அதிலிருந்து மாறி முதலில் தேவதைகளுக்குப் பிரியமானவர்களாக ஆகவேண்டும். அப்

புறம் அவர்களுக்குப் பிரியம் உண்டாக்காதவர்களாக ஆக வேண்டும்; அதாவது ஞானத்தையடையவேண்டும்.

இவற்றையெல்லாம் அறியாதவர்கள் சொல்லுவதை நன்ருகப் பரிசோதிக்கவேண்டும். அது தப்பு, இது தப்பு என்று சொன்னல் அப்படியே நம்பிவிடக்கூடாது. ஆரம்பத்திலேயே ஆஸ்திக புத்தி வேண்டும். பால்யத்திலேயே திருத்தம் இருக்கவேண்டும். பால்யத்திலேயே அப்பதார்த்தங்களை ஆலோசித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். குழந்தைகளுக்கு ஆஸ்திக தர்மத்தைப் புகட்டவேண்டும். தத்துவம் ஏதாயிருந்தாலும் கிரஹிக்கவேண்டும். தப்பு என்று சோதித்துத் தெரிந்த பின்பு ஒத்துக்கொள்ளவேண்டுமே யல்லாமல் ஒருவன் தப்பு என்ருல் ஆலோசிக்காமல் ஒத்துக்கொள்ளக் கூடாது. ஸ்வபாவத்தில் தப்பில்லாததைத் தப்பு என்பதும் கூடாது.

நமக்கு அறிவு வேண்டும். பசுவாக இருக்கக்கூடாது. பசுவாக இல்லாமல் பதியாக ஆனல் பசுபதி அவிழ்த்து விட்டுவிடுவார். அவர் அவிழ்த்துவிடத்தான் இருக்கிருர். இத்தனை பசுக்களைக் கட்டிப்போட்டுக் கொண்டிருப்பது அவருக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். நம்மை அவிழ்த்து விடாமல் இருக்கவேண்டும் என்று தேவதைகள்தாம் கவலைப் படுகிருர்கள். நாம் நன்ருக இருந்தால் பசுபதி அவிழ்த்து விட்டுவிடுவார். எப்பொழுது நன்ருக இருக்கலாம்? நாம் அவரானல் நன்ருக இருக்கலாம். ஆகையால் நாம் வேறு இல்லை என்று அத்வைத பாவனை பண்ணவேண்டும். அவரையே தியானித்து அவர் சொன்னபடியே கேட்கவேண்டும். அவர் என்ன சொல்லுகிருர், "நானக ஆகி இரு; அவிழ்த்து விட்டுவிடுகிறேன்" என்று சொல்லுகிருர்.

அவருடைய ஆஜ்ஞைகள்தான் சாஸ்திரங்கள். அவைகள் அப்படித்தான் சொல்லுகின்றன.

நாம் கர்மயோகம், பக்தியோகம் முதலியவைகளைச் செய்து வந்தால் ஞானத்தை அடையலாம்.

---

# 12

## ஷடங்கங்கள்

[18—10—1932]

வேதபுருஷனுக்குப் பல அங்கங்கள் இருக்கின்றன. வாய், மூக்கு, கண், காது, கை, பாதம் என்ற ஆறு அங்கங்கள் இருக்கின்றன. இவற்றை ஷடங்கம் என்று சொல்லுவார்கள். சடங்கு என்று சொல்லுவது அந்த வார்த்தையிலிருந்து மருவி வந்ததுதான்.

பழைய காலத்தில் தர்மசாஸனங்களெல்லாம் கோயிற் சுவர்களில் கல்லில் வெட்டப்பட்டிருக்கின்றன. தர்மங்களைப் பதிவு செய்யும் ஸப் ரிஜிஸ்தர் ஆபீஸ் பழைய நாளில் கோயில்தான். திருவாங்கூரில் ராஜ்யாதிகாரிகளுள் திருமந்திர ஓலை என்பவன் ஓர் உத்தியோகஸ்தன். இந்தக் காலத்தில் பிரைவேட் ஸெகிரிடரி (Private Secretary) என்று சொல்லுவார்கள். அவன் அரசன் எது சொன்னாலும் அதை எழுதிக்கொள்ளவேண்டும். பின்பு அதை யார் யாருக்கு அனுப்பவேண்டுமோ அவரவர்களுக்கு அனுப்ப வேண்டும். அந்தக் காலத்தில் யார் எந்தத் தர்மம் பண்ணினாலும் அதை மஹாராஜாவுக்குத் தெரிவிக்கவேண்டும். அவன் அதை ஒத்துக்கொண்டு ஆஜ்ஞைபண்ணுவான். அந்த ஆஜ்ஞையைத் திருமந்திர ஓலைக்காரன் எழுதி அனுப்புவான். அப்படி எழுதிக் கடைசியில், 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளுவதாகவும்' என்று எழுதுவான். அந்த ஆஜ்ஞை எந்த ஊரில் தர்மம் செய்யப்படுகிறதோ அந்த

ஊர் ஸபையாருக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கோயிற் சுவரில் வெட்டச் செய்வார்கள்.

ஒவ்வொரு ஊரிலும் பிராம்மண ஸபை ஒன்று இருந்தது. அதில் வேதமும் மந்திரப் பிராம்மணமும் தெரிந்தவன் அங்கத்தினனாகலாம். அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் உண்டு. இன்னார் இன்னார்தாம் அந்த ஸபைக்கு அங்கத்தினனாகலாமென்ற விதி உண்டு. இன்ன இன்ன குற்றம் செய்தவர்களும் அவர்களுடைய பந்துக்களும் ஸபைக்கு அங்கத்தினர் ஆகக்கூடாது என்ற நியதியும் உண்டு. ஒவ்வொருவர் பெயரையும் ஓலையில் எழுதிக் குடத்தில் போட்டு ஒரு குழந்தையைக் கொண்டு எடுக்கச் சொல்லுவது வழக்கம். அப்படி எடுத்த ஓலையில் உள்ள பெயருடையவர் ஸபைக்கு அங்கத்தினராவார். உத்திரமேரூர் என்னும் ஊரில் உள்ள சிலாசாஸனத்தில் இந்த விஷயங்கள் அதிக விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

அந்த ஸபையினர்க்குள் பல பிரிவுகள் உண்டு. நீருக்காக ஒரு பிரிவு, வரிபோட ஒரு பிரிவு முதலிய பல பிரிவுகள் உண்டு. தர்மத்துக்கு நிலம் கொடுத்தாலும், பணம் கொடுத்தாலும், மாடு ஆடுகளை கோயில்களில் தீபம் போடுவதற்காக விட்டாலும் அந்த ஸபையினர் மூலமாக விடவேண்டும். அவர்கள் அதை அங்கீகரிப்பார்கள். அந்த தர்மசாஸனத்தில் 'இங்ஙனம் ஸபையோம்' என்று அவர்கள் கையெழுத்துப்போடுவார்கள். அப்படி உள்ள கையெழுத்துக்களால் பலபேருடைய பெயர்கள் இப்பொழுது தெரியவருகின்றன. அவற்றில் 'ஷட்கர்மநிரதன்' என்றும் 'சடங்கவி' என்றும் பிராம்மணர்களுக்குப் பட்டம் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'சடங்கவி' என்பது 'ஷடங்கவித்' என்பதன் சிதைவாகும்.

அர்த்த சாஸ்திரம் அரசன் தன்னுடைய பொருள்களைப் போல ஒவ்வொரு ஏழையின் பொருளையும் ரக்ஷித்துக் கொடுக்கவேண்டும் என்று சொல்லுகிறது. அதற்குத்தான் நான்கு உபாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அரசன் புத்திசாலியாயிருந்தால், பணம், அதிகாரம், பட்டங்கள் முதலியவைகளால் ஸமாதானம் உண்டாகாது என்பதை அறிந்து, மஹான்களுடைய உபதேசத்தை ஜனங்களெல்லாம் கேட்கச் செய்து ஜாதி வர்ணாசிரம தர்மத்தைக் காப்பாற்றி வரவேண்டும். அப்படிச் செய்தால் மற்றக் காரியங்களுக்கு இடமிருக்காது.

## தநுர்வேதம்.

மற்ற அரசர்களால் தன்னுடைய தேசத்துக்கு ஹிம்ஸை நேரும்பொழுது செய்கிற தண்டோபாயத்தைச் சொல்லுவது தநுர்வேதம். அந்த வேதப்படி அரசன் எப்பொழுதும் சண்டை செய்யத் தயாராக இருக்கவேண்டும். துஷ்ட அரசன் தன்னுடைய தேசத்தில் புகுந்து அலங்கோலம் பண்ணாமலிருக்க அப்படி இருக்கவேண்டும். அதற்காகத்தான் க்ஷத்திரியர்களிருக்கிறார்கள். ஒவ்வொருவனும் ஒவ்வொரு தொழில் பண்ணவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. எல்லாரேும் எல்லாம் செய்வது தப்பு. ஜர்மனியில் எல்லோரும் யுத்தம் செய்யப் பழகிக்கொள்ளவேண்டும் என்ற விதி இருக்கிறது. அதனால் லோகத்துக்கே கஷ்டம் உண்டாகும். அவர்களுக்கு அஹம்பாவம் உண்டாகி இருக்கிறது. லோகத்தையே சாப்பிட்டு விடுகிறேன் என்று அந்தத் தேசம் சொல்லுகிறது. ஆகையால் எல்லோரும் ஒரே தொழிலையே செய்யக்கூடாது. சரீரபலமே பெரிதென்று நினைப்பது தவறு. நம்முடைய சாஸ்திரத்தில் ஒவ்வொரு

ஜாதிக்கும் தனித்தனி ஒவ்வொரு முக்கியமான தொழில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இப்படித் தனித்தனியே வைத்ததினுல் பொதுவில் எல்லோருக்கும் ஸௌகர்யம் உண்டாகிறது. எண்ணெயாட்டுகிறவன் ஒருவன் இருக்கிருன்; சாஸ்திரம் வாசிப்பவன் ஒருவனிருக்கிருன்; யுத்தம் செய்வதற்கு ஒருவனிருக்கிருன். இப்படி ஒவ்வொரு தொழிலுக்கும் ஒவ்வொரு பிரிவு ஏற்பட்டு இருக்கிறது. க்ஷத்திரியன் சரீரபலம் உடையவனுக இருக்கிருன். பிராம்மணனுக்கு சரீரபலம் அவ்வளவு அவசியம் இல்லை. பிராம்மணனுக்கு அறிவு பலம் வேண்டும். அந்த அறிவினுல் எல்லோருக்கும் கைங்கரியம் பண்ணவேண்டும். அர்த்தசாஸ்திரம் தநுர்வேதம் என்பவைகளைப் பிராம்மணன் தெரிந்துகொண்டு, அவைகளை க்ஷத்திரியனுக்குச் சொல்லிக்கொடுக்கவேண்டும். அவைகளில் சொல்லி இருக்கிறபடி நடக்கிறவன் க்ஷத்திரியன்.

தநுர்வேதத்தில் ஆயுத விசேஷங்களைப் பற்றியும், துஷ்டர்களை எப்படி ஸம்ஹாரம் பண்ணுவது என்பதைப் பற்றியும் பல விஷயங்கள் சொல்லப்படுகின்றன. தநுஸ் என்பது வில். அது முக்கியமான ஆயுதம். அதிலிருந்து தநுர்வேதமென்னும் பெயர் வந்தது. ஆயுதங்கள் பொதுவாக இரண்டு வகைப்படும். அவை அஸ்திரம், சஸ்திரம் என்பவை. துஷ்டர்களால் உண்டாகின்ற ஹிம்ஸையைத் தடுக்கவும் அவர்களை ஹிம்ஸிக்கவும் அவை உதவுபவை. அஸ்திரமென்பது மந்திரத்தை யுச்சரித்துப் பிரயோகம் பண்ணினுல் அநேக கோடி பேர்களை ஸம்ஹாரம் பண்ணுவது. பாசுபதாஸ்திரம், நாகாஸ்திரம் என்பவை போன்ற பல அஸ்திரங்களிருக்கின்றன. அதர்வவேத மந்திரங்களை அத்தியயனம் பண்ணி ஸித்தி பெற்று வைத்திருந்தால்

அவைகள் அஸ்திரப்பிரயோகம் பண்ண உபயோகப்படும். ஒரு சின்ன தருப்பையை எடுத்து அந்த மந்திரத்தை உச்சாரணம் பண்ணிப் போட்டாலும் அது பகைவனைத் தஹித்து விடும். ஸரியான்படி அநுஷ்டானம் செய்து தேஹ பரிசுத்தியோடு இருந்து அஸ்திரப் பிரயோகங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். கையில் கிடைக்கும் மற்ற ஆயுதங்கள் சஸ்திரங்களாம். உள்ளே இருக்கும் மந்திரசக்தியால் பிரயோகிப்பது அஸ்திரம். வெறும் பலத்தால் பிரயோகம் பண்ணுவது சஸ்திரம்.

சஸ்திரம் மூன்று வகைப்படும். அவை, முக்தம், அமுக்தம், முக்தாமுக்தம் என்பவை. முக்தம் என்பது கையை விட்டு எறிவது. கல், பாணம் முதலியவை அந்த வகையைச் சேர்ந்தவை. அமுக்தம் கையில் வைத்துக் கொண்டே ஹிம்ஸிப்பது. கத்தியைப் போன்றவை அந்த வகையைச் சேர்ந்தவை. பாசம் முதலிய வேறு சில ஆயுதங்கள், கையிலும் இருக்கும்; கையை விட்டும் போகும்; திரும்பி வரும். அவை முக்தாமுக்தம். சில சக்கிரங்கள் பிரயோகம் பண்ணினால் ஸம்ஹாரம் செய்து விட்டுத் திரும்பி வந்து விடும். அவை இந்த வகையைச் சேர்ந்தவைகளே.

அஸ்திரங்களுக்குள் பல பேதங்கள் இருக்கின்றன. ஓர் அஸ்திரத்துக்கு விரோதமாக மற்றோர் அஸ்திரம் இருக்கிறது. நாகாஸ்திரம் என்பது ஒன்று. அதற்கு விரோதமானது காருடாஸ்திரம். அக்கினியஸ்திரத்துக்கு எதிரானது வாருணாஸ்திரம். அது அக்னியினுடைய சக்தியைத் தீர்த்தமயமாகச் செய்துவிடுகிறது. இந்த அஸ்திரங்கள் க்ஷத்திரியர்களிடம் இருக்கவேண்டும்.

வஸிஷ்டர் ராமனுக்கு அஸ்திர சஸ்திர வித்தைகளைக் கற்றுக் கொடுத்தார். ஆனால் அவர் அவைகளைப் பிரயோகம் பண்ணவில்லை. பிராம்மணனுக்குப் பதினெட்டு வித்தைகளும் தெரிய வேண்டும். காந்தர்வவேதங்கூடத் தெரிய வேண்டும். லோகத்திற்கு வேண்டியவைகளெல்லாம் தெரிய வேண்டும். க்ருஷி சாஸ்திரம் தெரிய வேண்டும். அது ஜ்யோதிஷத்தில் ஸம்ஹிதை என்னும் பிரிவில் வந்து விட்டது. வீடு கட்டத் தெரிய வேண்டும். அவைகளை யெல்லாம் தெரிந்து கொண்டு அந்த அந்த வித்தைகளுக்கு ஏற்ற ஜாதியினர்க்கு அந்த அந்த வித்தையைச் சொல்லிக்கொடுக்க வேண்டும். ஒரு விருத்தியிலும் நுழையக் கூடாது. அத்தியயனம் பண்ணவேண்டும். நேரே தொழில் வைத்து அதிக லாபம் ஸம்பாதிக்கலாம் என்று வரக்கூடாது. அந்த அந்த ஜாதிக்கு அந்த அந்த வித்தையைச் சொல்லித் தருவதுதான் பிராம்மணனுடைய தொழில்.

தனுர்வேதம் வஸிஷ்டருக்குத் தெரியும்; விசுவாமித்திரருக்கும் தெரியும். விசுவாமித்திரர் யாகம் பண்ணினார். அதை ஸுபாஹு மாரீசன் என்னும் ராக்ஷஸர்கள் வந்து கெடுக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது அவர் 'இந்த வித்தை யார் சொல்லிக் கொடுத்தது? நான்தானே சொல்லிக் கொடுத்தது. நானே இவர்கள் பேரில் அஸ்திரங்களைப் போடுகிறேன்' என்று எண்ணிப் போடவில்லை. ராம லக்ஷ்மணர்களைக் கூட்டிக் கொண்டு வந்து அந்த ராக்ஷஸர்களைத் தொலைக்கச் சொன்னார்.

ஆகையால் பிராம்மணன் எல்லாத் தொழில்களையும் தெரிந்து கொண்டு அதற்கு உரிய ஜாதியினருக்கு அந்த அந்தத் தொழிலைச் சொல்லிக் கொடுப்பதோடு நிற்க வேண்டும். அறிவை மாத்திரம் ஜாக்கிரதையாக ரக்ஷித்து வர

வேண்டும். எல்லாவற்றையும் அவன் தெரிந்து கொள்ள வேண்டும். 'கத்தி சுற்றத் தெரியுமா?' என்றால் 'தெரியும்' என்று சொல்லவேண்டும். 'சிகித்ஸை பண்ணத் தெரியுமா?' என்றால் 'தெரியும்' என்று சொல்ல வேண்டும். 'சித்திரம் எழுதுவையா?' என்றால் 'எழுதுவேன்' என்று சொல்ல வேண்டும். வர்ணாசிரமதர்மத்துக்குத் தக்கபடி அந்த அந்தத் தொழிலாளியைச் சிஷ்யனாக்கிக் கொண்டு அந்த அந்த வித்தையைச் சொல்லிக் கொடுத்து அவன் தரும் குரு தக்ஷிணையைக் கொண்டு ஜீவிக்க வேண்டும். குரு தக்ஷிணை கொஞ்சமாக இருந்தாலும் திருப்தி அடையவேண்டும். மற்றவையெல்லாம் ஆபத்தர்மம். ஒரு தொழிலைப் பார்த்துக் கொண்டே இருந்தால் அறிவை ஸம்பாதிக்க முடியாது. பாக்கியெல்லாம் ஆபத்காலதர்மம். அந்த நிலை இப்பொழுது வந்திருக்கிறது.

தனுர்வேதத்தில் சில யுத்த ஏற்பாடுகள் சொல்லப் படுகின்றன. வியூஹம் என்பது ஒன்று. தனுர்வியூஹம், கருடவியூஹம் என்பவைகளைப் போலப் பல வியூஹங்கள் உண்டு. அந்த வியூஹங்களின்படி ஸைன்னியத்தை நிறுத்தி வைப்பார்கள். யானைப்படையை இன்ன இடத்தில் நிறுத்த வேண்டும், குதிரைப் படையை இன்ன இடத்தில் நிறுத்த வேண்டும், மற்ற ஸைன்னியங்களை இன்ன இன்ன இடங்களில் நிறுத்த வேண்டும் என்ற விஷயங்களும், எதிரியை எப்படிச் சுற்றிக் கொள்ளுவது என்பதும், இன்ன இன்ன தினுஸாக நின்றால் எதிரி அகப்படுவான் என்பதும், இவைகளைப்போன்ற வேறு பல விஷயங்களும் தநுர் வேதத்தில் சொல்லப்படும். சதுரங்க ஆட்டத்திற்கூட ஆனையைப் பிடிக்க இப்படிப் போகவேண்டும், குதிரையைப் பிடிக்க இன்னது செய்ய வேண்டும் என்ற நியதி ஏற்பட்டிருக்கிறது.

சதுரங்க ஸைன்னியத்தில் ஏற்பட்டதுதான் திருஷ்டாந்தத்தில் சதுரங்கத்தில் இப்படி ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணன் அபிமன்யுவுக்கு எதிரியின் ஸைன்னியங்களுக்குள்ளே போக வழி சொல்லிக் கொடுத்து வெளியில் வர வழி சொல்லிக் கொடுக்கவில்லை என்றும் அதனால் அவன் விரோதிகளிடம் அகப்பட்டுக் கொண்டான் என்றும் பாரதத்தில் இருக்கிறது. இப்படிப்பட்ட பலவகை உபாயங்கள் தநுர்வேதத்தில் இருக்கின்றன. இப்பொழுது ஓர் உபாயமும் தெரியாது. கோட்டைகளெல்லாம் இடிக்கப்பட்டுவிட்டன.

ஒவ்வொருவனுக்கும் வில்வித்தை தெரிய வேண்டும். ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு தொழில் இருப்பதில் அது க்ஷத்திரியன் தொழில். ஆனாலும் அவன் பிறர் உதவியை வேண்டினால் எல்லோரும் உதவி செய்யவேண்டும். தன்னையும், தன்னுடைய வீட்டையும், தன்னுடைய குழந்தை மனைவிகளையும் ரக்ஷிக்கப் பலம் ஒவ்வொருவனுக்கும் வேண்டும். ஆகையால் தநுர்வேதத்தை ஒவ்வொருவனும் அறிந்து கொள்ள வேண்டும். ஜீவனத்துக்கு அர்த்தம் எப்படி முக்கியமோ அப்படிப் பலமும் அவசியமேயாகும்.

காந்தர்வவேதம்

வயிற்றுக்கும் உபயோகம் இல்லாமல் பகை, துக்கம் முதலியவைகளை நிவர்த்திக்கவும் உபயோகப்படாமல் உத்ஸாஹத்தை மட்டும் தருவது காந்தர்வவேதம். சித்திரம் இருக்கிறது; பார்த்தால் ஸந்தோஷம் உண்டாகிறது. ஸங்கீதக் கச்சேரி நடக்கிறது; கேட்டால் காதுக்கு ஓர் இனிமை ஏற்படுகிறது. நாடகம் (Drama), ஸினிமா முதலியவைகள் இருக்கின்றன. இவைகளால் நமக்கு வயிறு நிரம்புவதில்லை. ஆனாலும் இவைகளை நடத்துபவர்களுக்கு வயிறு

நிரம்புகிறது. பார்க்கப் போகிறவர்கள் தங்கள் வயிற்றுக்கு வைத்துக் கொண்டிருப்பதையும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வந்து விடுகிறார்கள். கிருஷி செய்தால் தான்யம் கிடைக்கிறது; அதனால் வயிறு நிரம்புகிறது. ஆனால் ஆட்டம் (Dance), நாடகம் (Drama), போட்டோ (Photo) முதலியவைகளால் வயிற்றுக்கு ஒரு பிரயோஜனமு மில்லை. ஆனாலும் இவைகள் உபயோகமில்லை என்பதில்லை. இவைகளால் மனதுக்கு ஓர் உத்ஸாஹம் ஏற்படுகிறது.

இந்த மாதிரி உத்ஸாஹங் கொடுக்கும் விஷயங்களி லேயே பொழுது போக்கிக் கொண்டிருப்பவர்கள் கந்தர்வர் கள். அவர்கள் நம்முடைய கண்ணுக்குத் தெரியமாட்டார் கள். நம்முடைய கண்ணுக்குத் தெரியாமல் மைக்ராஸ் கோப்புக்குத் தெரியும் பிராணிகள் இருக்கின்றன. எலக்ட்ரி ஸிடி நமது கண்ணுக்குத் தெரிவதில்லை. அப்படி நம் முடைய கண்ணுக்குத் தெரியாத அநேக ஜாதிகள் உண்டு. அவைகளைத் தெரிந்து கொள்ளும் கண்களும் இருக்கும். எக்ஸ்ரேயால் (X Ray) ஸாதாரணமாகக் கண்ணுக்குத் தெரியாதவைகள் தெரிகின்றன. அது போல நம்முடைய கண்ணுக்குத் தெரியாத தேவ ஜாதிகள் சில திவ்விய சக்ஷுஸுக்குத் தெரியும்.

கந்தர்வர்களைப் போல எழுதியுள்ள சித்திரங்களில் அவர்கள் புஷ்பம் சொரிவதைப் போலவும் வீணை கானம் செய்வதைப் போலவும் இருப்பதைப் பார்க்கலாம். அவர் களுக்கு உத்ஸாஹம் அதிகம். இந்திரிய விஷயங்களில் பிரீதி உள்ளவைகளுக்கு அவர்கள்தாம் அதிஷ்டான தேவ தைகள். ஆகையால் வெறும் இந்திரிய ஸுகத்தைத் தரும் வித்தைகளுக்குக் காந்தர்வவேதம் என்று பெயர் ஏற்பட் டது.

அந்த சாஸ்திரத்தில் முக்கியமாக உள்ளவை மூன்று. அவை நிருத்தம், கீதம், வாத்தியம் என்பவை. இவைகளை அல்லாமல், சித்திரம், சமையல் முதலிய அநேக தினுஸு ருசிக்குத் தக்கபடியுள்ளவை இருக்கின்றன. சாப்பாடு நிரம்ப ருசிகரமாயிருந்தால் வயிறு நிரம்பாது. தெவிட்டி விடும். அப்புறம் தீர்த்தத்தைக் கொண்டுதான் வயிற்றை நிரப்ப வேண்டும்.

நிருத்த கீத வாத்தியங்கள் முக்கியமானவை என்று சொன்னேன். கலைகள் மொத்தம் 64. அவைகளிற் பல இந்தக் காந்தர்வவேதத்தில் அடங்கி இருக்கின்றன. கவித்துவம், பல பாஷைகளைத் தெரிந்து கொள்வது, சதுரங்கம், பாட்மிண்டன், பொம்மலாட்டம், ஸினிமா முதலிய காரியத்துக்கு உபயோகம் இல்லாமல் விசித்திரத்தைக் காட்டுகின்றவைகளெல்லாம் காந்தர்வவேதத்தில் அடங்கியவைகளேயாகும். அவைகள் கடைசி பக்ஷமாகத் தெரிந்து கொள்ள வேண்டியவை. ஆனால் ஜனங்களுக்கு அவைகளில்தான் அதிக ஆசை உண்டாகிறது. புத்தி அவைகளில்தான் அதிகமாக உபயோகப்படுகிறது.

நிருத்தம் என்பது அபிப்பிராயத்தைக் கை கால் அசைவால் காட்டுவது.

कस्तूरीतिलकं ललाटफलके वक्षःस्थले कौस्तुभं
नासाग्रेनवमौक्तिकं करतले वेणुं करे कङ्कणम् ।
सर्वाङ्गे हरिचन्दनं च कलयन् कण्ठे च मुक्तावलिं
गोपस्त्रीपरिवेष्टितो विजयते गोपालचूडामणिः ॥

[கிருஷ்ணகர்ணாமிர்தம்]

என்ற ஒரு சுலோகம் இருக்கிறது. இது கிருஷ்ணனுடைய வர்ணனை. இதை வாயால் சொல்லாமல் கையினாலும்

உடம்பினாலும் அசைவு முதலியவைகள் செய்து காட்டி இன்ன சுலோக அர்த்தத்தைத்தான் அபிநயித்துக் காட்டுகிறான் என்று ஸபையோர்கள் அறியும்படி செய்ய வேண்டும். அந்த நாட்டியம், தாண்டவம் லாஸ்யம் என்று இரண்டு வகைப்படும். ஈசுவரன் செய்தது தாண்டவம்; அம்பிகை செய்தது லாஸ்யம். பூஜையில்கூட உபசாரமாக நிருத்தம் உண்டு. ராஜோபசாரத்தில் ஒன்று அது. ராஜ ஸமூஹத்தில் செய்யப்படுவது ராஜோபசாரம். புருஷர்கள் செய்வது தாண்டவம். ஸ்திரீகள் செய்வது லாஸ்யம்.

மனோபாவத்தை வார்த்தையால் சொல்லும்பொழுது அதைக் காதால் கேட்கிறோம். அதுபோலக் கண்ணால் பார்த்து மனத்திலுள்ள அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளச் செய்வது நாட்டியம். பொம்மலாட்டத்தில் எல்லாவற்றையும் பொம்மை செய்து தெரிவிக்கிறது. மலையாளத்தில் 'கதைகளி' என்று ஒரு ஆட்டம் நடக்கிறது. அதில் வாய் பேசாமல் ஊமை போல எல்லோரும் ஆடுவார்கள். மனோபாவம் எல்லாம் தெரிந்துவிடும்.

கீதம் என்பது பாட்டு. சப்தம் தொண்டையில் உண்டாகிறது. எல்லோரும் சப்தம் போடுகிறோம். அந்தச் சப்தத்தை ஸ்வரமாகப் பிரித்து இதற்கப்புறம் இது என்று அழகாக வைத்தால் அது ஓர் இனிமையை உண்டாக்குகிறது. புரட்டிப் புரட்டி வைத்தால் ஓரின்பம் ஏற்படுகிறது. அந்தப் புரட்டலில் நன்றாகப் பழகினவனுக்கு ஒரு மணிக்கு இரு நூறு அல்லது முந்நூறு ரூபாய் கொடுக்கிறோம். இங்கிலீஷில் 26 எழுத்துக்கள் இருக்கின்றன. அவைகளையே புரட்டிப் புரட்டி வைத்து எவ்வளவோ புஸ்தகங்கள் எழுதுகிறார்கள். டாகூர் எழுதினால் அதற்குப்

பணம் கொடுக்கிறார்கள்; நிரம்பக் கொண்டாடுகிறார்கள். நாம் எழுதினால் அதற்கு அவ்வளவு மதிப்பு இருப்ப தில்லை. அதைப் போலத்தான் ஸங்கீதமும் இருக்கிறது. மஹாவைத்திய நாதையர் பாடினால் அது மிகவும் நன்றா யிருந்தது என்று சொல்லுகிறார்கள். நமக்கும் தொண்டை யிருக்கிறது. ஆனாலும் அப்படிப் பாட வருவதில்லை. நன் றாகப் புரட்டினால் அதிக ஸந்தோஷம் உண்டாகிறது. ஸாதாரணமாக இருந்தால் ஒன்றும் பிரயோஜனம் இல்லை என்று சொல்லி விடுகிறோம். அந்தப் புரட்டலையே பிலா க்கணமாகப் புரட்டினால் துக்கம் உண்டாகிறது.

சித்திர கலையும் (Art) இப்படிப்பட்டதுதான். வர்ண முள்ள புட்டி (Bottle)யையும் பிரஷையும் வைத்துக் கொண்டு நாமும் எதையாவது ஒன்றை எழுதுகிறோம். அது நன்றாக இருப்பதில்லை. அதில் பழக்கமுடையவன் முன் பின் பார்த்து யோசித்து எழுதினால் நன்றாக இருக்கிறது. கலைகளெல்லாம் இப்படிப்பட்டவைகளே.

மஹாகவி ஒரு சுலோகம் எழுதினால் நன்றாக இருக்கிறது. அவனும் வார்த்தைகளைக் கொண்டு தான் அந்தச் சுலோ கத்தை எழுதுகிறான். நமக்கும் வார்த்தைகள் தெரியும். ஆனால் நாம் எழுதுவது நன்றாக இருப்பதில்லை. புரட்டி வைப்பதில் தான் வித்தியாஸம் இருக்கிறது. ஸ்வரம், எழுத்து, வார்த்தை எதுவாயிருந்தாலும் புரட்டலுக்குத் தகுந்தபடி உயர்வு தாழ்ச்சி அமைகின்றன.

ஸங்கீதம் வாயினால் பாடுவது. வாத்தியம் வெளியி லுள்ள ஒரு ஸாமானிற் சப்தம் உண்டாக்குவது. வாத் தியத்திற் சில தினுஸுகள் உண்டு. தந்திரீவாத்தியம், ரந்திரவாத்தியம், சர்மவாத்தியம், லோஹவாத்தியம்

என்ற நாலு வகைகள் உண்டு. நம்முடைய தொண்டை மாம்ஸ வாத்தியம். அதில் காற்றைக்கொண்டு சப்தம் உண்டு பண்ணுகிறோம். சர்ம வாத்தியம் என்பது தோலைக் கட்டி அடித்துச் சப்தம் உண்டாக்குபவை. மிருதங்கம், தவில், நகார், பேரிகை, கிஞ்ஜரா முதலியவைகள் சர்ம வாத்தியங் கள். தந்திரீ வாத்தியங்கள் அநுரணனம் உடையவை. ஒரு தரம் மீட்டினால் நிரம்ப நாழிகை அந்தச் சப்தம் இழுத்துக்கொண்டே இருக்கும். முதல் தந்தியில் உண் டான சப்தம் பின்பும் நீடித்து இரண்டாம் தந்தியில் உண் டான சப்தத்தோடு சேர்ந்து நிற்கும். அதுதான் அநுரண னம் என்பது. வீணை, தம்பூர் முதலியவை தந்திரீ வாத்தி யங்கள். இவைகளில் ஸ்பரிசத்தால் சப்தம் உண்டாகின் றது. ரந்திர வாத்தியம் துவாரம் உடையது. புல்லாங் குழல், நாயனம் முதலியவை ரந்திர வாத்தியத்தில் சேர்ந் தவை. லோஹ வாத்யம் தாளம், மோர்ஸிங்கு முதலி யவை. மண்ணால் உள்ள இரண்டு வாத்தியங்கள் இருக் கின்றன. அவை கடமும் ஜலதரங்கமும். ஜலதரங்கத்துக் குப் பீங்கான் கிண்ணங்களை உபயோகிக்கிறார்கள். அவை மண்தானே? ஹார்மோனியம் ரந்திர வாத்தியத்திற் சேர்ந் ததே. வாய்க்குப் பதிலாகத் துருத்தி இருக்கிறது. கையா லடைப்பதற்குப் பதிலாகப் பில்லையை அழுத்துகிறார்கள்.

நாட்டியம் என்பது ஆதி முதல் கடைசி வரையில் ஒரு சரித்திரத்தை அங்க அசைவால் காட்டுவதாகும். பாட்டில் இரண்டு வகை இருக்கின்றன. மனோபாவமும் கீதமும் கலந் தது பாட்டு. அர்த்தமும் ஸ்வரானந்தமும் பாட்டினால் உண் டாகின்றன. பாட்டில் சப்தானந்தத்தைப் போல நாட்டியத் தில் கை கால் விந்யாஸத்தால் ஏற்படும் ஆனந்தம் இருக்கி றது. பாட்டிலும் மனோபாவம் இருப்பது போல நாட்டியத்தி

னும் இருக்கிறது. ராகாலாபனம் பண்ணுதல், ஸ்வரம் பாடுதல், தானம் பாடுதல் என்பவைகளில் அர்த்தமில்லாமல் சப்தம் மாத்திரம் ஆனந்தத்தைத் தருகிறது. கீர்த்தனம் அல்லது சுலோகம் சொன்னால் அர்த்தம் சப்தம் என்னும் இரண்டும் உண்டாகின்றன. அது போல நாட்டியத்தில் அங்கசர் யானந்தமும் அர்த்தானந்தமும் ஏற்படுகின்றன. ராக ஆலாபனம் முதலியவைகளில் சப்தத்தால் ஆனந்தம் ஏற்படுவதைப் போல அங்கசர்யையால் மட்டும் ஆனந்தம் உண்டாக்கும் ஆட்டத்திற்கு நிருத்தம் என்று பெயர். நடையில் யானை நடை, ஹம்ஸ நடை அழகாக இருக்கின்றன; ஸந்தோஷத்தைத் தருகின்றன. நாய், காக்கை முதலியவைகளின் நடை நன்றாக இல்லை. நடையில் வித்தியாஸம் இருக்கிறது. அங்க சேஷ்டை மாத்திரம் ஸந்தோஷத்தைத் தருவதற்கு யானை நடை, ஹம்ஸ நடை என்பவை உதாரணம். மனித சரீர சேஷ்டையால் மாத்திரம் ஆனந்தம் தருவது நிருத்தம்.

நிருத்தமும் நாட்டியமும் தனித்தனி உபசாரங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

நாட்டியம் செய்வதற்காக ஒரு ஜாதி இருக்கிறது. அது பரத ஜாதி என்று சொல்லப்படும். நட்டுவன் தாஸி முதலியவர்கள்தாம் அந்தத் தொழிலைச் செய்யலாம். இதைப் போல வைத்தியம் செய்ய அம்பஷ்டன் என்ற ஒரு ஜாதியினர் தனியாகச் சொல்லப்பட்டிருக்கிறார்கள். டிராமா போடுகிறவர்கள் பரத புத்திரர்கள். பரத சாஸ்திரத்தில் நாடகத்துக்கு வேண்டிய லக்ஷணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதில் ஸ்திரீ புருஷர்களுள் நட்டுவன் ஆண் வேஷம் போட்டால் அவன் பெண்டாட்டிதான் நாடகத்திலும் அவனுடைய மனைவியாக வேஷம் போட வேண்டும்.

பொதுப்பெண் போடக்கூடாது. புருஷ வேஷம் போட்ட பெண்ணையும் பெண் வேஷம் போட்ட புருஷனையும் பார்க்கக் கூடாது என்று தர்ம சாஸ்திரம் சொல்லுகிறது. பிராம் மணன் வேஷம் போட்டு ஆடக்கூடாது. இப்படியானுல் இந்தக் காலத்தில் டிராமாவே இராது. அதைப் பரத புத் ரர்கள்தாம் நடிக்க வேண்டும். புருஷராகவும் மனைவியாக வும் இருப்பவர்களே நாடகத்திலும் புருஷராகவும் மனைவி யாகவும் நடிக்க வேண்டும். நாடகத்தின் முதல் அப்படியே ஆரம்பிக்கப்படுகிறது. நடன் தன்னுடைய பத்தினியைக் கூப்பிட்டுச் சொன்னுன் என்று சொல்வது வழக்கம்.

இவைகளைச் சொல்லிவைக்கிறவன் பிராம்மணன். அப் படியானுல் அவன் போய் நடிக்கக் கூடாதா காளி தாஸன் நாடகம் பண்ணவில்லையா என்று கேட்கிருர்கள். ஒவ் வொரு ஜாதிக்கும் தனித்தனித் தொழில் இருந்து வந்தது. இப்பொழுது எல்லாவற்றையும் எல்லாரும் செய்கிருர்கள். பிராம்மணன், நாட்டியம், கீதம் என்னும் இரண்டு தொழிலே யும் செய்கிருன். நாயனம் வாசிப்பதை மட்டும் இன்னும் வைத்துக் கொள்ளவில்லை. அப்படி வைத்துக் கொள்ளு வதற்கு யாதொரு தடையும் இப்பொழுது கிடையாது. ஆனுலும், இதை எப்படி வைத்துக் கொள்ளாமலிருக் கிருனே அப்படியே பழைய காலத்தில் ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் இருந்தான். ஆனுல் ஸகல வித்தைகளையும் அவன் தெரிந்து கொண்டிருந்தான்.

ஸ்ரீமத் ஆசார்யர்களைப் பற்றிய ஒரு ஸமாசாரம் இங்கே ஞாபகத்திற்கு வருகிறது. ஆனுல், அது சங்கர விஜயத்திலில்லை. சக்கிலியன் ஒருவன் அவரைப் பார்த்து, செருப்புத் தைப்பீரா என்று கேட்டான். அவர் முடியு மென்று சொல்லி ஊசியை வாங்கி முதலில் மூக்கிலே தடவிக்

கொண்டார். அதைப் பார்த்து சக்கிலியன் போதுமென்று போய் விட்டான். ஆரம்பிக்கும்பொழுது சக்கிலியர்கள் அப்படிச் செய்வது வழக்கமாம். பரம ஸூக்ஷ்மமும் அவருக்குத் தெரிந்திருக்கிறதென்று அந்தச் சக்கிலி போய் விட்டான்.

எல்லாத் தொழிலும் எல்லாருக்கும் தெரிய வேண்டும். ஆனாலும் ஒரு முக்கியத்தொழில் அதிகமாகத் தெரிய வேண்டும். வித்தை ஸம்பாதிக்கிறதே ஒருவனுடைய தொழிலாக இருக்க வேண்டும். விமானம் பண்ணுவது ஒருவனுடைய தொழிலாக இருக்க வேண்டும். எல்லோரும் விமானம் பண்ணுபவர்களாயிருந்தால் ஏறுபவர்கள் யார்? இந்திரியா நந்தத்துக்கு வேண்டிய காரியங்களைச் சில பேர் செய்ய வேண்டும். ஆத்மாவுக்கு ஆநந்தம் தரும் ஆத்ம வித்தையைச் சிலபேர் தெரிந்து கொள்ளவேண்டும். சரீரத்துக்கும் வயிற்றுக்கும் ஆயுர் வேதமும் க்ருஷியும் உபயோகப்படும். இந்திரியங்களுக்கு இன்பத்தைக் கொடுப்பதில் காந்தருவ வேதம் பிரயோஜனப்படுகிறது. இப்படி மனுஷ்யனுக்கு வேண்டிய ஸகலமான வித்தைகளும் பதினெட்டு வித்தைகளில் அடங்கி இருக்கின்றன.

அர்த்த சாஸ்திரத்தின்படி பார்த்தாலும் வர்ணாசிரம தர்மம் நிலைக்கும்படி ராஜாங்கம் பண்ணவேண்டும் என்று தெரிந்தது. காந்தர்வ வேதத்தைப் பார்த்தாலும் அந்த அந்தத் தொழிலாளி அந்த அந்தத் தொழிலைப் பண்ணி ஜீவிக்க வேண்டும் என்று தெரிகிறது. பிராம்மணன் தெரிந்தவற்றைச் சொல்லிக் கொடுத்து அதனால் கிடைக்கின்ற தக்ஷிணையால் ஜீவிக்க வேண்டும். ஒருவன் எவ்வளவு கொடுத்தாலும் போதுமென்று இருந்து வித்தையை ஸம்ரக்ஷிக்கவேண்டும். குரு தக்ஷிணையை வாங்காமல் செய்யக் கூடியவர்கள்

அப்படியே செய்யவேண்டும். ராஜாக்களிடம் தானம் முத லியவைகள் வாங்கினதால் அதிக செல்வமடைந்தவர்கள் தக்ஷிணை வாங்காமலே வித்தையைச் சொல்லிக் கொடுத்து அபிவிருத்தி செய்ய வேண்டும். ஆனால் இந்தக் காலத்தில் பிறரிடத்தில் பிரதிக்கிரஹம் வாங்காமல் ஜீவனம் பண்ணும் சக்தி உடையவன் கண்டபடி செலவழிக்கிறான். ஏழை தான் வித்தையைக் கற்றுக் கொள்ளுகிறான். பணக்காரன் தான் அப்படியில்லாமல் அதிகமாக வித்தையை ரக்ஷிக்க வேண்டும். மற்றவர்கள் தங்களுக்குக் கொஞ்சம் பணம் இருந்தாலும் அதை ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண் டும். அதை வைத்துக் கொண்டு ஜீவனம் பண்ணவேண் டும். சில வருஷங்களுக்கு முன் வரையில் நம்முடைய தேசத்தில் அப்படிப்பட்டவர்கள் இருந்தார்கள். இப் பொழுது எல்லாம் மாறிவிட்டன.

பிராம்மணன் பிறருக்குக் கற்பிப்பதைத் தவிர வேறு தொழில் பண்ணக் கூடாது. இந்தக் காலத்தில் அப்படி இருப்பது எல்லாருடைய சம்மதமுமிருந்தாலொழிய முடி யாது. இப்பொழுது சாஸ்திரமே மறந்து போய் விட்ட படியால் இதைப்பற்றி ஆலோசிப்பதற்கு இடமேயில்லை. தொழில் செய்யும் அதிகாரி ஒருவன்; அதைச் சொல்லிக் கொடுப்பவன் பிராம்மணன். ஒருவன் வேறொருவனுடைய தொழிலைச் செய்யக்கூடாது என்ற நியதி பழைய காலத்தில் இருந்தது. ஒவ்வொருவருக்கும் தம் தம் தொழிலில் க்ஷேமம் இருக்கிறதென்பது தெரிந்திருந்தால் இந்த மாதிரி நிலைவராது. அதைத் தெரிந்து கொள்ளச் சாஸ்திரம் இல்லை. அது இருந்திருந்தால் எல்லாரும் எல்லாம் செய்ய வேண்டும் என்று சொல்லும் நிலைவராது.

இந்தக் காலத்தில் பள்ளிக்கூடத்தில் படிக்கிறவர்கள் கிராப்பையும், காபி குடிக்கிறதையும் முதலில் பழகிக் கொள்ளுகிறார்கள். படிப்பதனால் அதிகச் செலவு என்பது தெரிந்திருந்தும் படித்து விட்டு உத்தியோகம் அகப்பட வில்லை என்று அலைகிறார்கள். சர்மகாரன் நாகசுரக்காரன் என்னும் இருவர் வேலையைத் தான் பிராம்மணன் செய்வ தில்லை. பாக்கி எல்லாவற்றையும் செய்கிறான். வீட்டையும் நிலத்தையும் விற்றுச் ஸர்டிபிகெட்டுகளாக (Certificate) மாற்றி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வேறு ஒன்றும் கிடைக்க வில்லை. ஒரே பந்தியில் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட வேண்டும், ஜாதி ஆசிரம நினைவையே மறந்துவிட வேண்டும் என்ற எண்ணந்தான் இப்பொழுது வந்திருக் கிறது.

ஸ்வதேசி, ஸ்வராஜ்யம் என்று இப்பொழுது எல் லோரும் சொல்லுகிறார்கள். ஆனால் எல்லாம் வெள்ளைக் காரன் மாதிரி இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறார் கள்; அவனைப் போல எல்லாரும் ஒன்றாகப் போய் விட வேண்டும் என்கிறார்கள். இவைகளெல்லாம் பரதேசி, பர ராஜ்யம், பரர்களுடைய வழக்கந்தான். வாஸ்தவமான ஸ்வராஜ்யம் வரவேண்டுமென்றால் நம்முடைய தேசத்தில் ஆசார அநுஷ்டானங்கள் எப்படி இருந்தன, இப்பொழுது இருப்பது எப்படி மாறினால் நல்லது என்பதை அறிந்து பழையமாதிரி வருவதற்கு வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும். நம்முடைய தேசத்துப் பழைய வழக்கங்கள் மாறாமல் இருக்க வேண்டும். பிறதேசத்தார்கள் மாதிரி நாம் இருக்க வேண்டும் என்று சொல்லுகிறது தப்பு. கிராப் அவர்கள் வைத்துக் கொள்ளுகிறார்கள் நானும் வைத்துக் கொள்ளுகிறேனென்று அதை அநுஸரிப்பது தப்பு. ஒரு

குல்லாய் வியாபாரி தன்னுடைய குல்லாய் மூட்டையுடன் ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது அந்த மரத்தில் இருந்த குரங்குகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குல்லாயாக எடுத்துக் கொண்டன. அவன் தலையில் ஒரு குல்லாய் போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து எல்லாம் தலையில் வைத்துக் கொண்டன. வியாபாரி எழுந்திருந்து பார்த்தான் எல்லாக் குல்லாய்களையும் குரங்குகள் எடுத்துக் கொண்டு போய் விட்டன. 'இந்தக் குல்லாய் இருந்து என்ன ப்ரயோஜனம்' என்று வெறுப்போடு தன் தலையில் இருந்த குல்லாயை எடுத்துக் கீழே எறிந்தான். குரங்குகளெல்லாம் அவன் மாதிரி செய்ய வேண்டுமென்று தாமும் அப்படியே குல்லாய்களெல்லாவற்றையும் கீழே எறிந்து விட்டன. அதைப் போலத்தான் ஒருவனைப் பார்த்து மற்றொருவன் ஒன்றைச் செய்வதும் இருக்கிறது. முஹம்மதியர்கள் பல நூறு வருஷங்கள் இந்தத் தேசத்தை ஆண்டு வந்திருக்கிறார்கள். அந்தக் காலத்தில் யாவரும் தாடியை வைத்துக் கொள்ளவில்லை. இங்க்லீஷ ராஜாங்கம் வந்து 150 வருஷங்கள் கூட ஆகவில்லை. எல்லோரும் கிராப் செய்து கொண்டிருக்கிறார்கள். முன்னே சொன்ன குரங்கைப் போலத் தான் நாம் செய்து வருகிறோம். அவர்களை சொல்லாமலே நாமே அவர்களுடைய பழக்கங்களுக்கு அடிமையாகி விட்டோம். குலாசார தர்மங்களில் நாம் அவர்களுக்கு அடிமையாகி விட்டோம். மற்ற அடிமைத் தனம் இருந்தென்ன? போயென்ன?

உண்மையான ஸ்வராஜ்யமானால், நம்முடைய ஸ்வதந்த்ரப்படி நடத்தும் சட்ட ஸபை வந்தால்—அவர்களைப் போல் ஆகவா அவை வேண்டும்?—நம்முடைய ராஜ்யம்

எப்படி இருந்தது, என்ன செய்ய வேண்டுமென்பதை ஆலோசிக்க வேண்டும். நாம் நாமாக இருக்க வேண்டும். எவ்வளவு பலம் நமக்கு உண்டோ அவ்வளவையும் நம்மை நாமாக்குவதில் உபயோகப்படுத்த வேண்டும். ஒவ்வொருவனும் தம் தமக்குத் தோன்றியபடி ராஜாவை வைத்துக் கொள்ளப் பிரியப்படுகிறான். வெள்ளைக்காரரைப் போல் வேஷத்தினால் தான் எல்லாக் காரியங்களும் நடக்கின்றன. அப்படியிருப்பவர்கள் தான் சட்டம் செய்கிறார்கள். அதற்கு அடிமையாக நாம் இருக்கிறோம். நம்முடைய விஷயமே தெரியாமல் வெள்ளைக்கார ஸம்பிரதாயங்களை அநுஸரிப்பவர்களுக்கு ஓட்டு கொடுத்து வரும் ராஜ்யம் அடிமை ராஜ்யந்தான். முன்பு எந்த முறை இருந்ததோ அந்த முறை தான் நம்முடையது. அதன்படி இருந்தால் உத்கருஷ்த்தை அடையலாம் என்பது அறிந்து, நமக்கு எந்த மாதிரி ஸ்வதந்திரம் உண்டோ அதை அந்த முறையை நிலை நிறுத்துவதில் விநியோகப்படுத்த வேண்டும். தர்மம், தொழில்முறை, முதலியவைகளை அறிந்தவர்களையும், அநுஷ்டானம் ஒழுக்கம் உடையவர்களையும் ராஜ்யத்தில் வைத்துப் பார்க்கவேண்டும். நம்முடைய தர்ம ராஜ்யத்தை ஸ்தாபித்து இது நன்றாக நடக்கிறது என்று காட்டி மற்றவர்களும் இதை அநுஸரிக்கச் செய்யவேண்டும். வர்ணாசிரமக்கட்டுப்பாடு இருக்க வேண்டும். நமக்கு ஸ்வதந்திரம் கொடுப்பது வாஸ்தவமாக இருந்தால், அந்த ஸ்வதந்திரத்தை நாம் உபயோகப்படுத்தமுடியுமானால், நம்முடைய தர்மத்தை அநுஸரித்து நடத்திக் காட்ட வேண்டும். அப்படி நடத்திக் காட்டுவதற்கு நம்முடைய சாஸ்திரங்களையெல்லாம் தெரிந்து கொள்ளவேண்டும். புஸ்தகங்கள் இருக்கின்றன. அதனால் தான் நானும் சொல்லுகிறேன். இல்லா

விட்டால் எல்லாம் மறந்து போயிருக்கும். அவைகளைப் பார்த்து அந்தப்படி ஏன் நடக்கக்கூடாது. அந்தப்படி பண்ணுகிறவர்களை ஏன் சட்டசபைக்கு அனுப்பக்கூடாது என்று ஆலோசித்து நமக்குக் கொடுக்கப்படும் ஸ்வாதந்த்ரியத்தை பிரயோஜனப்படுத்தி லோகத்தில் நடத்தி எல்லோருக்கும் வழி காட்டிப் பரமேச்வரனுடைய அநுக்ரஹத்தைப்பெற வேண்டும்.

———

# 27

## ஸம்ஸ்காரங்கள்

(14—11—32)

நாம் வஸிக்கும் இந்த லோகத்திற்கு மிச்ரலோகம் என்று பெயர். மிச்ரம் என்றால் கலந்தது என்பது அர்த்தம். எவை கலந்தது? ஸுகம் துக்கம் என்னும் இரண்டும் கலந்தது. ஸுகமே இல்லாமல் துக்கமே இருக்கும் ஒரு லோகம் இருக்கிறது. துக்கமே இல்லாமல் ஸுகமே இருக்கும் ஒரு லோகம் இருக்கிறது. இரண்டும் கலந்த லோகம் இது. பிரம்மலோகம் அதாவது ஸத்திய லோகம், வைகுண்டம், கைலாஸம் முதலியவைகள் ஸுகமே இருக்கிற லோகங்கள். துக்கமே இருக்கிற லோகம் நரக லோகம். அதில் அநேக பேதங்கள் உண்டு. நிரம்ப கொரோமான நரகம் ரௌரவ நரகம் என்பது. நரகலோகத்தைத் தவிரப் பாக்கி லோகங்களில் பிதுருக்கள் இருந்தால் அமாவாஸைத் தர்ப்பண பலன் அவர்களுக்குப்போய்ச் சேரும். நரகலோகத்தில் இருப்பவர்களுக்குச் சேராது. அவர்களுக்கு உபயோகப்படுபவைகளும் இருக்கின்றன. அழுக்கு வேஷ்டியில் உள்ள ஜலம், தலை மயிர் ஜலம், கை அலம்புகிற ஜலம் இவைகளை அவர்களை உத்தேசித்துக் கொடுத்தால் அவர்களுக்குத் திருப்தி உண்டாகும். அதனால்தான் வேஷ்டி பிழிய ஒரு மந்திரம் இருக்கிறது. சிகோதகத்தைப் பிழிய ஒரு மந்திரம் ஏற்பட்டிருக்கிறது. ஆந்திரதேசத்தில் உத்தராபோசனத்துக்குப் பின்பு பாக்கி உள்ள ஜலத்தை

எச்சில் இலைக்கு வலது புறத்தில் ஒரு மந்திரம் சொல்லி விட்டு விடுகிற ஸம்பிரதாயம் இருக்கிறது.

रौरवेऽपुण्यनिलये पद्मार्बुदनिवासिनाम्

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ரௌரவம் ஒரு கடுமை யான இடம். பாபத்திற்கு இருப்பிடம். பத்மம் என்பது ஒரு எண்ணிக்கை. அற்புதம் என்பதும் ஒரு எண்ணிக்கை. பல கோடி பத்மம், பல கோடி அற்புதம் எவ்வளவு வருஷங்களோ அவ்வளவு காலம் அந்த ரௌரவத்தில் இருந்து கஷ்டப்படுகிறவர்களும் இருக்கிறார்கள். 'அவர்களுக்கு இந்தத் தீர்த்தம் கொடுக்கிறேன்; அவர்களுக்குள்ள அக்ஷயமான தாஹம் தீரட்டும்' என்று அந்த தீர்த்தத்தை விடவேண்டும்.

நாம் வைஶ்வதேவம் பண்ணுகிறோம். அதற்குப் பதிலாக ஆந்திரர்கள் போஜன காலத்தில் ஐந்து பலி கொடுப் பார்கள். அதற்குச் சித்திராதி பலி என்று பெயர். அதாவது தனியாகச் சாதத்தை எடுத்து வைப்பார்கள். ஆபோசனத் துக்கபபுறம் ஒரு மந்திரத்தைச் சொல்லி ஜலத்தைவிட்டு உபஸம்ஹாரம் செய்வார்கள்.

இந்த லோகத்தில் ஸந்தோஷம் இருக்கிறது. இப் பொழுது இங்கே இருப்பவர்களுக்குச் இங்கிருந்து எழுந்து போகிறவரையிலும் ஸந்தோஷம் இருக்கிறது. துக்கமும் இந்த லோகத்தில் இருக்கிறது. நாம் பிரயத்தினம் பண்ணினால் ஸுகம் அதிகமாக இருக்கிறது. ஸுகதுக்கங் கள் ஒவ்வொருவருக்கும் ஏற்றக் குறைவாக இருக்கின்றன. சிலருக்கு ஸுகம் அதிகமாக இருக்கிறது; சிலருக்குக் குறை வாக இருக்கிறது. மனதைக் கட்டுப்படுத்தித் துக்கப்படா தவர்களும் இருக்கிறார்கள். எப்பொழுதும் துக்கப்படுகிற

வர்களும் இருக்கிறார்கள். மற்றப் பிராணிகளிலும் இப்படி உள்ளவை இருக்கின்றன. ஒவ்வொருவருக்கும் மாத்திரைக் (Degree) கணக்கில் வித்தியாஸம் இருக்கிறது. ஸுகதுக்கங்கள் சீதோஷ்ணத்தைப்போல இருக்கின்றன. லோகங்களெல்லாம் தர்மாமீடர் (Thermometer) போல இருக்கின்றன. அந்தத் தர்மாமீடரில் கொதிக்கும் இடம் (Boiling point) தான் நரகலோகம். உறையும் இடம் (Freezing point) தான் ஸ்வர்க்க லோகம். இந்த இரண்டையும் மாற்றியும் வைத்துக்கொள்ளலாம். கொதிக்கும் இடத்தில் (Boiling point) குளிர்ச்சி இல்லை. உறையும் இடத்தில் (Freezing point) உஷ்ணமே இல்லை. மொத்தத்தில் மூன்று தினுஸுகள் இருக்கின்றன. உறையும் இடம் (Freezing point), கொதிக்கும் இடம் (Boiling point), இந்த இரண்டுக்கும் நடுவில் டிகிரிகள் (Degrees) உள்ள இடம் ஆக மூன்று உள்ளன. இந்த மூன்றையும் மூன்று லோகங்களுக்கு உபமானங்களாகச் சொல்லலாம். மேல் லோகம் ஒருவகை. அவை ஸத்தியலோகம், வைகுண்டம், கைலாஸம் என்பவைகள். உபநிஷத் இவைகளை ஒன்றாகச் சொல்லும். புராணங்கள் பிரித்துச் சொல்லும். கீழே இருப்பது நரகலோகம். மத்தியில் இருப்பது மிச்ரலோகம்.

நம்முடைய சாஸ்திரப்படி மற்ற லோகங்களைவிட இந்த லோகந்தான் உயர்ந்தது. ஏன்? இதிலிருந்து எந்த லோகத்துக்கு வேண்டுமானாலும் போகலாம். மற்ற லோகங்களுக்குப் போனால் இஷ்டப்படி அவ்விடம் விட்டுப்போக முடியாது. தர்மராஜா இவ்வளவு காலம் இருக்கவேண்டுமென்று எழுதி வைத்திருப்பான். நாமாக ஒன்றும் செய்ய முடியாது. இங்கே நமக்கு ஒரு தனி ஸ்வாதந்திரியம் இருக்கிறது. புண்ணியம் பண்ணலாம். பாபமும் பண்ணலாம். கையினால் பூஜை

யும் பண்ணலாம், அடிக்கலாம். நாக்கினால் நாம பாராயணம் பண்ணலாம், அல்லது யாரையாவது வையலாம். இரண்டுக்கும் நமக்குச் சக்தி இருக்கிறது. இப்படி ஒவ்வொரு இந்திரியத்துக்கும் இரண்டுவித சக்தியைப் பகவான் கொடுத்திருக்கிறார். இந்த ஸ்வாதந்திரியம் மற்ற இடங்களில்லை. அவைகளெல்லாம் போகபூமிகள். மாடாகப் பிறந்தால் புண்ணியம் பண்ண முடியுமா? தேவர்களும் அந்த மாட்டைப்போன்றவர்கள்தான். மாட்டுக்குப் பாபமும் இல்லை; புண்ணியமும் இல்லை. இந்த லோகத்தில் கர்மாநுஷ்டானம் பண்ணி நல்ல கதி யடையலாம். தேவலோகத்தில் அது முடியாது. கிருஷி பண்ணுகிற பூமிஸ்தானம் இது. பாக்கியெல்லாம் வயிற்றுக்குச் சாப்பிடுகிற ஸ்தானம். உற்பத்தி ஸ்தானம் அல்ல. அங்கே பலன்களை அநுபவிக்கலாம். எவ்வளவு புண்ணிய பாபம் பண்ணியிருக்கின்றோமோ அவ்வளவு பலன்களை அநுபவிக்கலாம். அதனால் அவைகளுக்குப் போகபூமி யென்ற பெயர் ஏற்பட்டது. பண்ணுகிற சக்தி இங்கே தான் உண்டு. இங்கு மனுஷ்ய ஜன்மத்திற்குத்தான் உண்டு. இந்த லோகத்தில்தான் உண்டு. மற்றவைகளெல்லாம் போக பூமிகளே. குணத்தில், நல்லது கெடுதல் இருக்கலாம். கர்மாவைப் பண்ண மற்ற லோகங்களிலிருப்பவற்கு அதிகாரம் இல்லை.

கர்மா ஒன்று, குணம் ஒன்று. ஆக இரண்டும் சேர்ந்து ஜீவனை மற்ற லோகங்களுக்கு அழைத்துக்கொண்டு போகின்றன. வேலை செய்து பரலோகத்திற்குப் போவதற்கு இந்தக் கர்ம பூமியைத் தவிர இதர பூமிகளில் ஸாத்தியமில்லை. ஒரு கர்மாவைச்செய்ய வேண்டுமென்றால் அதற்குக் காலதேசம் வேண்டும். சிராத்தம் அர்த்த ராத்திரியில் பண்ணலாமா? வழக்கம் இல்லை. அதற்கு ஏற்பட்ட காலம் உண்டு. அப்ப

டியே அந்தக் கர்மா உபதேசிக்கப்பட்ட தேசம் ஒன்று இருக்கிறது. அந்தக் கர்மாவைப் புண்ணிய பூமியில்தான் பண்ண வேண்டும். முக்கியமாக பாரத வர்ஷத்தில் வைதிக கர்மாக்கள் பண்ணப்படவேண்டும். மற்றவைகளெல்லாம் போகபூமிகள். இந்த தேசத்திலும் சில காலங்கள் நிஷித்தமானவை. சில கர்மாக்களுக்குச் சில இடங்களும் நிஷித்தமானவை. பரிசுத்த இடத்தில் பரிசுத்த காலத்தில் கர்மாக்களைப் பண்ண வேண்டும். கர்மா என்றால் என்ன? கர்மா என்பது காரியம். ஒரு வேஷ்டியை உண்டாக்குவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்யவேண்டி யிருக்கின்றன! அதைப்போல அநேக காரியங்கள் பண்ணி ஒருவனை ஆத்மவித்தாக்க வேண்டும். குணத்தினாலும் கர்மாவினாலும் வேலை செய்ய வேண்டும். கர்மாவுக்கு ஸம்ஸ்காரம் என்று பெயர். ஒரு பதார்த்தத்துக்கு உள்ள தோஷத்தைப் போக்குவது எதுவோ, குணத்தைப் புகட்டுவது எதுவோ அதுதான் ஸம்ஸ்காரம். கேசஸம்ஸ்காரம் என்பது க்ஷவரம் செய்துகொள்வது, அழுக்கு பேன் முதலியவைகளை எடுப்பது, தைலம் தேய்ப்பது முதலியவைகளாம். ஜீவாத்மாவுக்குத் தோஷங்கள் இருக்கின்றன. தோஷத்தை நிவர்த்திபண்ணிக் குணத்தை நிரப்பவேண்டும். சீப்பினால் வாரித் தைலம் தேய்ப்பது போன்றது ஸம்ஸ்காரம். வயலில் சில ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுகின்றன. முதலில் காயப் போடவேண்டும்; பின்பு உழவேண்டும்; ஜலம்விட்டுப் பரம் படிக்கவேண்டும்; பிறகு விதைக்க வேண்டும்; நாற்றுப் பிடுங்க வேண்டும்; களை பிடுங்கவேண்டும்; ஜலம் பாய்ச்ச வேண்டும்; அதிக ஜலமிருந்தால் மடை திறந்துவிட வேண்டும்; விளைந்தால் அறுவடை செய்யவேண்டும்; களத்தில் அடிக்க வேண்டும் ; பதர் தூற்ற வேண்டும்; நெல்லைக் கோட்டை கட்ட வேண்டும் ; பின்பு அந்த நெல் பழகவேண்டும். அப்புறம்

அதை உபயோகிக்க வேண்டும். இவ்வளவு காரியங்கள் இருக்கின்றன. இப்படியே நூலாகி வேஷ்டியாக வேண்டுமென்றால் பல காரியங்கள் செய்யவேண்டி யிருக்கின்றன. பஞ்சு யந்திரசாலையில் எவ்வளவு காரியங்கள் செய்யப்படுகின்றன. நம்முடைய ஆத்மாவானது சிக்கலாக இருக்கிறது. சிக்கலை எடுத்து எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கச் செய்யவேண்டும். அப்படிச் செய்வதற்குச் சில தடைகள் இருக்கின்றன. சில ஸமயங்களில் ஆனந்தம் உண்டாகிறது. வலி இருந்தும் இவ்வளவையும் மீறிக்கொண்டு கொஞ்சம் ஆனந்தம் உண்டாகிறது. அந்த ஆனந்தம் எப்பொழுதும் இருக்கவேண்டும்.

ஜீவனைப் பிரம்மலோகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும். ஈசுவர ஸந்நிதானத்தில் சேர்த்துவிட்டால் அப்புறம் துன்பமே இராது. பிரளயத்துக்கு அப்புறம் ஐக்கியம் உண்டாகும். ஆகையால் அங்கே சேர்க்கத் தயார்பண்ண வேண்டும். அதற்கு 40 ஸம்ஸ்காரங்களும் 8 ஆத்ம குணங்களும் ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள். பல தர்மஸூத்திரங்களை அவர்கள் செய்து ஸம்ஸ்காரங்களைச் செய்யும் முறைகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவைகள்தான் ஸ்மிருதிகள். 28 ஸ்மிருதிகள் இருக்கின்றன. அவைகளில் 18 ஸ்மிருதிகள் பிரதானமானவை. மற்ற பத்து உபஸ்மிருதிகள். மனு, யாஜ்ஞவல்கியர், ஹாரீதர், பராசரர் முதலியவர்கள் ஸ்மிருதிகள் செய்திருக்கிறார்கள்.

இந்த ஸ்மிருதிகளைத் தவிர தர்ம ஸூத்திரங்கள் பொதுவாகச் சிலர் எழுதியிருக்கிறார்கள். அவர்களுக்குள் கௌதமர் ஒருவர். விசேஷமாகச் சொல்லப்பட்ட ஒவ்வொரு கல்பஸூத்திரத்திலும் ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று வித்தியாஸ

முள்ளனவாக இருக்கும். ஆபஸ்தம்பரும் கௌதமரும் எல்லோருக்கும் பொதுவானவைகளை எழுதியிருக்கிறார்கள். ஆபஸ்தம்பர் தனியாகவும் எழுதியிருக்கிறார். கௌதமர் 40 ஸம்ஸ்காரங்களையும் 8 ஆத்ம குணங்களையும் சொல்லியிருக்கிறார். ஜீவன் உடம்பைவிட்டுப் பிரிந்தவுடன் நேரே பிரம்மலோகத்துக்குப் போய்ச்சேர இந்த நாற்பத்தெட்டும் காரணங்களாக இருக்கின்றன. இவைகளால் அந்த ஸந்நிதானத்தில் இருக்கலாம். அது பரம ஞானியினுடைய ஸந்நிதானத்தில் இருப்பதுபோல் இருக்கும். அசையாமல் ஆனந்தமாக இருக்கலாம். அவன் அரூபமாகிறபொழுது நாமும் கலந்துவிடலாம்.

இந்த நாற்பது ஸம்ஸகாரங்கள் கை கால் முதலியவைகளை ஆட்டிச் செய்யவேண்டும். ஓர் உத்தியோகம் செய்ய வேண்டுமென்றால், கையைக் காலை ஆட்டியும் வாயை அசைத்தும் செய்கிறோமல்லவா? நாற்பது கர்மரூப ஸம்ஸ்காரங்களும் எட்டு ஆத்மகுணங்களும் இருக்கின்றன.

यस्यैते चत्वारिंशत् संस्काराः अष्टावात्मगुणाः स ब्रह्मणः सायुज्यं सलोकतां जयति ।

யார் இந்த நாற்பத்தெட்டையும் அநுஷ்டிக்கிறானோ அவன் நேராகப் பிரம்மலோகத்துக்குப் போகிறான்; கஷ்டம் ஸுகம் என்பவை இல்லாத ஊருக்குப் போகிறான். கஷ்டமும் ஸுகமும் இல்லாமல் எப்பொழுது இருக்கும்? எல்லாவற்றையும் ஏற்படுத்தினவனிடம் போனால் அப்படியிருக்கலாம். ஆத்மகுணங்களை ஆத்மசக்தி என்று சொல்லுகிறார்கள். அது லௌகிகமாகச் சொல்லுவது. பத்திரிகை வார்த்தை அது. ஆத்மாவுக்குச் சக்தி இல்லை. பழைய

தமிழ் ஸம்ஸ்கிருத புஸ்தகங்களில் ஆத்மசக்தி என்ற வார்த்தை இல்லை. ஆத்மகுணங்கள்தான் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை எட்டு.

நிஷேகாதி ஸ்மசானாந்தம் நாற்பது ஸம்ஸ்காரங்கள் சொல்லப்படுகின்றன. அதாவது, தாயார் வயிற்றில் எந்தத் தினத்தில் தேஹகாரணமான பதார்த்தம் இருக்க ஆரம்பித்ததோ அது முதல் தேஹம் அக்கினிக்கு ஆஹுதியாகிற வரைக்கும் நாற்பது காரியங்கள் செய்யவேண்டும். நிஷேகமும் அக்கினி ஸாக்ஷியாகச் செய்யப்படுகிறது ; கடைசியில் ஸ்மசான கர்மாவும் அக்கினி ஸாக்ஷியாகச் செய்யப்படுகிறது. அன்று முதல் அக்கினியை அணையாமற் காத்துவரவேண்டும். பிரம்மசாரி ஸமிதாதானம் தினந்தோறும் பண்ணி அக்கினி காரியம் செய்யவேண்டும். கிருஹஸ்தன் ஔபாஸனம் செய்ய வேண்டும். வானப்பிரஸ்தனுக்குக் கக்ஷாக்கினி என்று ஓரக்கினி சொல்லப்பட்டிருக்கிறது. அது காட்டிற் செய்வது. ஸந்நியாஸாசிரமத்தில் அக்கினியில்லை. அவனிடம் ஞானக்கினி இருக்கிறது. அவனுடைய தேஹத்துக்கு அக்கினி ஸம்ஸ்காரம் கிடையாது. புதைப்பது மரியாதைக்காகச் செய்வது. நியாயமாக அவனுடைய சரீரத்தை நாலாக வெட்டிக் காட்டில் நாலு திக்கில் போட்டுவிடவேண்டும். அது அங்கே உள்ள பிராணிகளுக்கு ஆகாரமாகும். ஜனங்களுக்கு உபத்திரவம் இல்லாமல் இருப்பதற்காகக் காட்டில் போட வேண்டுமென்று சொல்லப் பட்டிருக்கிறது. அப்படிச் செய்யாவிட்டால் புதைத்து அதன் மேல் மரம் செடிகளை வைக்க வேண்டும். காட்டில் போட்டால் பிராணிகளுக்கு ஆகாரம் ஆகிறது. இப்படிச் செய்தால் மரங்களுக்கு எருவாக ஆகிறது. இப்பொழுது பிருந்தாவனம் கட்டுவது முதலியவை மரியாதைக்காகச் செய்பவை. பில்வம், அசுவத்தம்

முதலிய பெரிய மரங்களை வைக்கவேண்டுமென்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது.

விவாஹ காலத்து அக்கினியை ஒவ்வொருவரும் அணையாமல் வைத்துக்கொண்டு அந்த அக்கினியிலேயே தேஹத்தையும் திரவ்வியமாக ஆஹுதிபண்ணி ஔபாஸனம் செய்யவேண்டும். எல்லோருக்கும் அக்கினி உண்டு. விவாஹ காலத்தில் எல்லா வர்ணத்தாரும் ஔபாஸனம் பண்ண வேண்டும். எல்லாரும் அக்கினியைக் காப்பாற்றி வரவேண்டும். இப்பொழுது பாரஸீகர்கள்தாம் அக்கினியைக் காப்பாற்றி வருகிறார்கள். அவர்களுடைய மதம் நம்முடையதிலிருந்து பிரிந்ததுதான். அவர்களுடைய மதக்கிரந்தத்திற்கு 'ஜெண்டவஸ்தா' என்று பெயர்; சந்தோவஸ்தை என்பது அப்படி வந்திருக்கிறது. ஜொராஸ்த்ரர் என்பவர் அவர்களுடைய ஆசார்யர். அப்பெயர் ஸௌராஷ்ட்ரர் என்பதன் சிதைவுதான். இரான் தேசம் அவர்களுடையது. ஆர்யதேசம் என்பது அப்படி மாறிவிட்டது. அவர்கள் அக்கினி அணைந்துபோனால் அதிகச் செலவு செய்து பெரிய பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளுகிறார்கள். நம்மிடத்தில் அக்கினி காரியம் 30 வருஷகாலமாகக் குறைந்துவிட்டது. வாழ்க்கை மாறிவிட்டது. அதிக சிரத்தை இருந்தால் வைத்துக் கொண்டிருக்கலாம். சிரத்தை இல்லாததற்கு இந்தக் காலப் படிப்பு ஒரு காரணம்.

இந்தத் தேஹத்தால் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. இதையும் கடைசியாக ஆஹுதியாகத் தேவதைகளுக்கு ஹோமம் செய்துவிட வேண்டும். அதற்காகத்தான் நெய்யைப் போட்டுத் திரவ்வியமாக இதை வைத்து ஹோமமாகக் கொடுக்கவேண்டும்.

---

# 28

# ஆரம்ப ஸம்ஸ்காரங்கள்

[15—11—1932]

ஜீவாத்மாவுக்குப் பரிசுத்தி ஏற்படுவதற்காக 40 ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவென்று சொன்னேன். அவை கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்மா, நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், பிராஜாபத்தியம் முதலிய வேதவிரதம் 4, ஸ்நானம், விவாஹம் அல்லது ஸஹதர்மசாரிணீஸம்பிரயோகம், பஞ்சமஹாயஜ்ஞங்கள் என்னும் பத்தொன்பதும், பாகயஜ்ஞங்கள் ஏழும், ஹவிர்யஜ்ஞங்கள் ஏழும், ஸோமயஜ்ஞங்கள் ஏழும் ஆக இருபத்தொன்று ஆகும். அஷ்டகை, அன்வஷ்டகை, பார்வணம், சிராவணி, ஆக்ரஹாயணி, சைத்ரி, ஆச்வயுஜி என்ற ஏழும் பாகயஜ்ஞங்கள். அக்கினியாதானம், அக்கினிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், ஆக்கிரயணம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்திராமணி என்ற ஏழும் ஹவிர்யஜ்ஞங்கள். அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோர்யாமம் என்னும் ஏழும் ஸோமயஜ்ஞங்கள். இவ்வளவும் சேர்ந்து 40 ஸம்ஸ்காரங்கள் ஆகும். இந்த ஸம்ஸ்காரங்களில் தினந்தோறும் பண்ணவேண்டியவை சில இருக்கின்றன. சில சில காலங்களில் பண்ணவேண்டியவை சில. ஆயுளில் ஒருதரம் பண்ணவேண்டியவை சில. இவை

களுக்குள் நன்ருகத் தெரிந்துகொண்டு செய்யவேண்டிய முக்கியமான ஸம்ஸ்காரங்கள் பஞ்சமஹாயஜ்ஞங்கள். அவை தினந்தோறும் செய்யவேண்டியவை.

பஞ்சமஹாயஜ்ஞங்கள்—பிரம்மயஜ்ஞம் தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்பவை. மற்றவைகளில், அநேகம் ஜன்மத்தில் ஒருதரம் பண்ண வேண்டியவைகளாக இருக்கும். ஔபாஸனம், அக்கினி ஹோத்ரம் ஒவ்வொரு நாளும் பண்ணவேண்டும். தர்ச பூர்ணமாஸம் பதினைந்து நாளைக்கு ஒருதரம் பண்ணவேண்டும். இவைகளில் ஔபாஸனம் பாகயஜ்ஞத்தைச் சேர்ந்தது ; மற்ற இரண்டும் ஹவிர்யஜ்ஞங்களைச் சேர்ந்தவை. பாக யஜ்ஞங்கள் எல்லாம் வருஷத்துக்கு ஒருதரம் செய்ய வேண்டும். ஏழு ஸோமயஜ்ஞங்களும் மற்ற ஸம்ஸ்காரங்களும் ஜன்மத்தில் ஒருதரம் பண்ணினுல் போதும். இவைகளை வேறுவிதமாக வகுத்துச் சொல்லுகிறேன்.

நித்தியம் செய்யவேண்டியவை ஏழு ; அவை பஞ்ச மஹாயஜ்ஞங்கள், அக்கினி ஹோத்ரம், ஔபாஸனம் என்பவை. தர்சபூர்ணமாஸம், பக்ஷத்திற்கு ஒருதரம் செய்யவேண்டியது. ஸம்வத்ஸரத்துக்கு ஒருதரம் செய்ய வேண்டிய ஔபாஸனத்தைத் தவிரப் பாக்கியுள்ள ஆறு பாகயஜ்ஞங்களும் மற்றவை எல்லாம் ஜன்மத்தில் ஒருதரம் செய்யவேண்டியவை.

ஒருபோகம் விளையும் நிலங்களில் அறுப்பறுக்கிறது வருஷத்துக்கு ஒருதரம். ஜலம் தினந்தோறும் பாய்ச்ச வேண்டும். இவைகளெல்லாம் ஸம்ஸ்காரங்கள். ஆனுலும் அவைகளுக்குள் வித்தியாஸம் இருக்கிறது, அவைகளைப் போன்றவைதான் இந்த ஸம்ஸ்காரங்களும்.

கர்ப்பாதானம் முதற்கொண்டு ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. தாயார் வயிற்றில் தேஹம் ஏற்படுகிற க்ஷணம் முதல் ஸம்ஸ்காரங்கள் ஆரம்பமாகின்றன. சரீர பிண்டமானது மந்திரபூர்வமாக உற்பத்தியாகவேண்டும். கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம என்பவை தாயார் தேஹத்துக்கு ஏற்பட்ட ஸம்ஸ்காரமென்று நினைக்கிறார்கள். அது தப்பு. அவை உள்ளே யிருக்கிற ஜீவனைக் குறித்தவை. அந்த ஜீவனுடைய பரிசுத்திக்காக ஏற்படுபவை. கர்ப்பத்திலுள்ள வேறொரு ஜீவனை உத்தேசித்துப் பண்ணப் படுபவைகளாதலினால் அந்த ஸம்ஸ்கார விஷயத்தில் தாயார் முதலியவர்களுக்குப் பொறுப்பு அதிகம். தங்களுக்காக என்றால் வேண்டாம் என்று எண்ணலாம். வேறொரு ஜீவனுக்காக யிருப்பதால் அநாதரவு பண்ணக்கூடாது.

தேஹம் வெளியில் வருவதற்கு முன்பு பண்ணப்படுபவை, கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம் என்னும் மூன்று ஸம்ஸ்காரங்களும். பும்ஸவனம் மூன்றாவது மாதக் கர்ப்பத்தில் செய்யவேண்டும். ஆறு அல்லது எட்டாவது மாதத்தில் ஸீமந்தம் பண்ணவேண்டும். இவ்வளவு ஸம்ஸ்காரங்களையும் பரமேசுவரப் பிரீதிக்காகப் பண்ணுகிறேன் என்று ஸங்கல்பம் செய்துகொண்டு பண்ணவேண்டும். இவ்வளவும் அவருடைய கிருபையைப் பெறுவதற்காகத் தான் பண்ணுவது.

நம்முடைய ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகள் கைலாஸத்திற்குப் போகும்பொழுது சிஷ்யர்களெல்லாம், பரமேசுவரனுடைய கிருபையைப் பெற ஸுலபமான வழி ஒன்று சொல்லவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். இதுவரையிலும் சொன்ன வேதாந்த விஷயங்களில் ஒன்றும் புரியவில்லை. ஸுலபமாக ஒன்று சொல்லவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

அப்பொழுது ஸ்ரீ ஆசாரியர்கள் ஐந்து சுலோகங்களைச் சொன்னார்.

वेदो नित्यमधीयतां तदुदितं कर्म स्वनुष्ठीयतां
तेनेशस्य विधीयतामपचितिः काम्ये मतिस्त्यज्यताम् ।
पापौघः परिधूयतां भवसुखे दोषोऽनुसन्धीयताम्
आत्मेच्छा व्यवसीयतां निजगृहात्तूर्णं विनिर्गम्यताम् ॥ १ ॥

என்பது அவைகளில் ஒன்று. 'நித்தியம் வேதாத்தியயனம் செய்யவேண்டும். கர்மாவைத் தவறாமல் அநுஷ்டானம் பண்ணு. அந்தக் கர்மா தான் ஈசுவர பூஜை. அவர் எந்த எந்தக் காரியத்தை எப்பொழுது பண்ணச் சொல்லியிருக் கிறாரோ அப்படி செய்து வருவதுதான் பூஜை' என்ற கருத்து இதில் இருக்கிறது. சிலபேர் உத்ஸவம், பூஜை, பஜனம் முதலியவை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். வேறு சில பேர் ஔபாஸனம், அக்கினிஹோத்ரம் செய்து கொண் டிருக்கிறார்கள். அவர்களைப் பார்த்துப் பூஜை பண்ணுகிற வர்கள், "இவர்கள் என்ன பண்ணி என்ன பிரயோஜனம். கொஞ்சங்கூடப் பக்தி கிடையாது?" என்று தூஷிக்கிறார் கள். அவர்கள் இவர்களைப் பார்த்து, கொஞ்சங்கூட ஆசார அநுஷ்டானங்கள் இல்லை. தாளம் போட்டுக் கொண்டிருக் கிறார்கள். மிலேச்சரைப் போல இருக்கிறார்கள். அகங் காரந்தான் இருக்கிறது" என்று சொல்லுகிறார்கள். நியாய மாக மத்தியஸ்தமாகப் பார்த்தால் கர்மாநுஷ்டானம் பண்ணுவதுதான் பெரிய பக்தி என்று தெரியவரும். அது தான் பஜனை.

ஒருப்பிரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார் கள். ஒருவன் எப்பொழுதும் எதிரில் நின்று கொண்டு

பிரபுவை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டே இருக்கிறுன். மற்ருருவன் பேசவே மாட்டான், எதிரில் வர மாட்டான். பிரபு எந்தக் காரியத்தைச் செய்யவேண்டுமென்று மனதில் நினைக்கிருனே அந்தக் காரியத்தைச் செய்வான். பொது ஜனங்கள் கிட்ட இருக்கிறவனிடத்தில்தான் பிரபுவுக்கு பிரியம் என்று நினைத்துக்கொண்டிருப்பார்கள். ஆனுல் வேலை செய்கிறவனிடந்தான் அவனுக்குப் பிரியம் இருக்கும். அசடனுயிருந்தால்தான் ஸ்தோத்திரம் பண்ணுபவனிடத்தில் அதிகப் பிரியமாக இருப்பான். அவனைப்போல ஈசுவரன் அசட்டுப் பிரபுவாக இருந்தால் வெறும் ஸ்தோத்திரம் செய்பவனிடத்தில் அதிகப் பிரியமாக இருப்பான். அவன் விதித்த கர்மாநுஷ்டானங்களைச் செய்வதுதான் பூஜை. அதனுல்தான் 'பரமேசுவரப்ரீத்யர்த்தம்' என்று ஸங்கல்பம் செய்துகொண்டு கர்மாக்களைச் செய்ய வேண்டும். வாஸ்தவமான கர்மாநுஷ்டானம், பக்தியும் கர்மாவும் கலந்ததுதான். அதனுல்தான் நம்முடைய ஸ்ரீ ஆசார்யர்கள், கர்மாநுஷ்டானம் செய்வதுதான் பரமேசுவர பூஜை என்று சொல்லி யிருக்கிருர்.

இவ்வளவுக்கும் அஸ்திவாரம் பரமேசுவரனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டுவது. கடைசியில் कृष्णानुस्मरणं परं என்று சொல்லுகிறேம். எல்லா ஸம்ஸ்காரத்துக்கும் தனித்தனியாக மந்திரங்களையும் அர்த்தத்தையும் சொல்லுவது என்பது முடியாத காரியம். எல்லாவற்றிற்கும் முதலில் ஸங்கல்பமும் கடைசியில் அர்ப்பணமும் செய்கிறேம். இந்த இரண்டும் இன்னவை, இன்ன அர்த்தம் உடையவை என்று தெரிந்தால் நல்லது.

லௌகிகர்களுக்கு ஸங்கல்பம் முதலியவைகளில் நிரம்ப அசிரத்தை இருக்கிறது. ஏதோ உபாத்தியாயர் சொன்ன

றென்று நினைக்கிறார்கள். அசட்டை செய்கிறார்கள். அவற்றின் அர்த்தம் தெரிந்து கொள்ளுவது கஷ்டமான காரியம் அல்ல. சிரத்தை யிருந்தால் தெரிந்து கொள்ளலாம். அமெரிக்காவில் நடக்கிற பரீக்ஷைக்கு என்ன பாடம் (Syllabus) என்பதைத் தெரிந்து கொள்ளுகிறார்கள். எதையும் சிரத்தையிருந்தால் தெரிந்து கொள்ளலாம்.

यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति ।

(சாந்தோக்யோபநிஷத்)

यदेव विद्ययेति हि । (பிரம்ஸூத்திரம்.)

ஒரு கர்மாவை அர்த்தம் அறிந்து கொண்டு பண்ணினால் அது வீர்யவத்தரம் ஆகிறது. தரம் என்பதனால் அறிவில்லாமல் பண்ணினால் வீர்யவத் ஆகிறதென்று தெரிகிறது என்று ஸ்ரீ ஆசார்யர்கள் சொல்லியிருக்கிறார்கள். எனக்கு ஒன்று தோன்றுகிறது: தெரிந்து கொள்ளாமற் பண்ணினால் அதிகப் பிரயோஜனம் உண்டு; தெரிந்தால் அவ்வளவு இல்லை என்று எனக்குத் தோற்றுகிறது. அது எப்படி?

ஒரு கலெக்டர் இருக்கிறார். அவருக்கு ஒருவர் வக்கீலை வைத்து மனு எழுதுகிறார். ஒரு குடியானவன் யாராவது ஒருவரிடம் எழுதி கலெக்டரிடம் நேரில் கொடுக்கிறான். அவனுக்கு ஒரெழுத்துக்கூட தெரியாது. 'எப்படியாவது நல்லது பண்ணவேண்டும்' என்று மனுவைக் கொடுக்கிறான். கலெக்டர் பார்த்தால் 'பாவம்! ஒன்றும் தெரியாது! நம்பிக்கை மாத்திரம் இருக்கிறது' என்று எண்ணி நல்லது பண்ணுவார்.

அதைப்போன்றதுதான் மந்திரமும். மந்திரத்துக்கு அர்த்தம் ஈசுவரனுக்குத்தான் தெரியும். நாம் போக்கிரித்

தனமாக இருக்கக்கூடாது. வக்கீல் வைத்துப் பேசினால் குற்றமானால் கலெக்டர் கோபித்துக் கொள்ளுவார். தெரிந்து தப்பாகப் பண்ணினால் அதிகக் கோபம் உண்டாகும். தெரியாமல் தப்பாக இருந்தால் தெரியாமல் பண்ணுகிறான் என்று மன்னிப்பு ஏற்படும். 'என்ன ஸார்! அர்த்தம் தெரியவில்லை. அதைப் பண்ணி என்ன பிரயோஜனம்?' என்று சொல்லுவது தப்பு. அர்த்தம் தெரியாமல் பண்ணுவதுதான் வீர்யவத்தரமாக எனக்குத் தோன்றுகிறது.

எல்லா ஸம்ஸ்காரங்களுக்கும் ஆரம்பத்தில் பரமேசவரப் பிரீதிக்காக என்ற ஸங்கல்பமும் கடைசியில் 'ஜனார்த்தன: பிரீயதாம்' என்பதும் சொல்லவேண்டும். அந்த இரண்டினுடைய அர்த்தங்களையும் தெரிந்து கொள்ளலாம்.

ஸங்கல்பத்தில் முதலில் தேசகாலக்கணக்குச் சொல்லப்படும். அவைகளை முன்பு ஒருநாள் சொன்னேன்.

ममोपात्तसमस्तदुरितक्षयद्वारा परमेश्वरप्रीत्यर्थम्

என்று பின்பு சொல்லுகிறோம்.

'என்னால் ஸம்பாதிக்கப்பட்ட எல்லாப் பாபங்களையும் போக்கிப் பரமேசுவரனுடைய பிரீதி உண்டாகும் பொருட்டு' என்பது இதன் அர்த்தம். இன்றுவரையில் நாம் நிறையப் பாபத்தை ஸம்பாதித்திருக்கிறோம். அந்த ஸாமான் கஷ்டமானது. அதைப் போக்கவேண்டும்; அலம்பவேண்டும். அதனால் என்ன பிரயோஜனம்? நம்முடைய ஹிருதயம் பரமேசுவரனுடைய ஸ்தானம். அதில் குப்பை நிறைய இருக்கிறது. நான் இங்கே பூஜைக்கு வருகிறேன். அப்பொழுது இங்கே குப்பை நிரம்ப இருந்தால் மிகவும் வருத்தமாக இருக்கும். குப்பையை எடுத்துவிடவேண்டும். நம்முடைய ஹிருதயத்திலுள்ள குப்பையைப் போக்க வேண்டும். அப்

பொழுதுதான் ஸ்வரூபம் தெரியும். இப்பொழுது பிரகாசம் தெரியாமல் ஆபாஸமாக இருக்கிறது. வந்து உட்கார வேண்டுமானாலும் இருக்கிற குப்பையைப் போக்க வேண்டும். இரண்டு விதத்திலும் குப்பைகள் போக வேண்டும். நமக்கோ குப்பையைச் சேர்க்கிறதே தொழிலாக இருக்கிறது. துரிதக்ஷயத்வாரா, அதாவது பாபம் போன வழியாகப் பரமேசுவரனுடைய பிரீதி உண்டாகும். எல்லா விதமான கர்மாக்களும் அதற்காகத்தான் ஏற்படுகின்றன. மற்ற மந்திரங்களுக்கு எவ்வளவு அர்த்தம் இருந்தாலும் இந்த மந்திர அர்த்தம் தெரிந்து பரமேசுவர பிரீதியை உத்தேசித்துச் சொன்னால்தான் பிரயோஜனப்படும்.

ஒரு காரியத்தில் தவறிப்போனால் பிராயச்சித்தம் பண்ணுகிறோம். அகால ஸந்தியாவந்தனத்துக்காகப் பிராயச்சித்த அர்க்கியம் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பிராயச்சித்தத்திலும் தப்பு வந்தால் என்ன பண்ணுகிறது? அதற்காக எல்லாவற்றிற்கும் சேர்த்து ஒரு பிராயச்சித்தம் இருக்கிறது. ஹேமாத்ரி என்று ஒரு புஸ்தகம் இருக்கிறது. அது பிராயச்சித்தங்களைப்பற்றிச் சொல்லுகிறது.

எல்லாப் பிராயச்சித்தத்துக்கும் மேலான பிராயச்சித்தம் கிருஷ்ணஸ்மரணம். முதலில் பரமேசுவரஸ்மரணம்; கடைசியில் கிருஷ்ண ஸ்மரணம் செய்ய வேண்டும். இவை சிவ விஷ்ணு அபேதத்தையும் காட்டுகின்றன. இப்படி நினைத்து உற்பத்தி முதல் அவஸான காலம் வரையில் பரமேசுவரனுடைய ஞாபகத்தோடு கர்மாக்களைச் செய்ய வேண்டும்.

ஒவ்வொரு மந்திரமும் ஒவ்வொரு தேவதையின் த்வாரா அர்ப்பணம் பண்ணப்படுகிறது. நாம் வரி செலுத்து

கிறோம். அவைகளெல்லாம் ஒரே ராஜாங்கத்துக்குப் போகின்றன. தொழில் வரி, மோட்டார் வரி, நில வரி முதலிய பல வரிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோரிடம் உண்டு. ஒவ்வொரு முத்திரைக்கடுதாசி உண்டு. அதுபோல ஒவ்வொரு கர்மாவுக்கும், காலம், மந்திரம், தேவதை, திரவியம் என்று தனித்தனியே பிரிவுண்டு. ஒவ்வொன்றுக்கும் கிரமம் வேறுவேறாக இருந்தாலும் எல்லாவற்றிற்கும் பரமதாத்பரியம் பரமேசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணுவதுதான். நாம் செலுத்துகிற வரிகளைப் பற்றியும் வரி செலுத்துகிற நம்மைப் பற்றியும் நம்முடைய அரசனுக்கு நன்றாகத் தெரியாது. பரமேசுவரனாகிய அரசனுக்கு ஒவ்வொருவருடைய விஷயமும் நன்றாகத் தெரியும்.

ஒவ்வொரு கர்மாவுக்கும் மந்திரம், திரவியம், தேவதை என்று மூன்று கிரமங்கள் உண்டு.

பிறப்பதற்கு முன்பு செய்ய வேண்டிய மூன்று கர்மாக்களைச் சொன்னேன். பிறந்தவுடன் ஜாதகர்மா செய்ய வேண்டும். அப்புறம் பதினோராவது நாள் நாமகரணம் செய்ய வேண்டும். ஆறாவது மாதம் அன்னப்பிராசனம் பண்ண வேண்டும். முதலில் அன்னத்தைக் ஊட்டுகிற கர்மா அது. அதுவும் பரமேசுவரபிரீதியாகச் செய்ய வேண்டும்.

கர்ப்பாதானம் முதல் நாமகரண பரியந்தம் உள்ளவை குழந்தைக்காகப் பெற்றோர்கள் பண்ணுபவை. தாயார் மருந்து சாப்பிட்டால் குழந்தைக்குத் தேஹபரிசுத்தி ஏற்படுகிறது. அதைப் போலவே தாயார் தகப்பனாருடைய சித்தவிருத்தி எப்படி இருக்கிறதோ அப்படியே உள்ளே இருக்கும் ஜீவனுக்கும் ஸாத்விகஸ்வபாவமோ, பாப அபிவிருத்தியோ உண்டாகும். மனது சாந்தமாக இருந்து ஒரு

ஸமாசாரம் எழுதி அதைப்படித்துப் பார்த்தால் நன்றா யிருக்கும். கோபமாக இருக்கும்பொழுது எழுதி அப்புறம் பார்த்தால் நன்றாக இருப்பதில்லை. சரீரத்திலும் அப்படியே குண தோஷங்கள் ஏற்படுகின்றன. அவயவஸந்நிவேசம் உண்டாகும்பொழுது தாய் தகப்பனுக்கு எந்த குணம் ஏற்படுகிறதோ அது உள்ளே இருக்கும் ஜீவனுக்கும் உண்டாகும். மனோபாவனையை அநுஸரித்துக் குணங்கள் ஏற்படுகின்றன.

இத்தகைய கர்மாக்களைப் பணக்காரர்கள் உரிய காலத் தில் பண்ணாமல் சேர்த்துப் பண்ணி விடுகிறார்கள். வைதிகர் கள் கிரமமாகப் பண்ணுகிறார்கள்; ஆனால் அவர்கள் அதையே ஜீவனமாக வைத்துக்கொள்ளுகிறார்கள். மற்ற வர்கள் எதையும் கவனிப்பதில்லை. அந்த அந்தக் காலத்தில் அந்த அந்த மந்திரத்தைச் சொல்லி அந்த அந்த திரவியங் களைக் கொண்டு அந்த அந்த ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும். எல்லாவற்றுக்கும் பெரிய காரியம் பரமேசு வரார்ப்பணம் பண்ணிச் செய்வது.

அன்னப்பிராசனத்துக்கப்புறம் சௌளம் செய்ய வேண்டும். அது சிகை வைக்கிறது. அந்தக் கர்மாவும் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணப்பட வேண்டும். ஸத் கர்மாவுக்கு உபயோகமாக இருக்க அது பண்ணவேண்டும். சிகை எடுப்பது மந்திரபூர்வமாக எடுக்க வேண்டும். ஸந்நியா ஸிகள் மந்திரபூர்வமாகத்தான் எடுத்துக்கொண்டிருக்கிறார் கள். மந்திரபூர்வமாக வைத்துக்கொண்ட சிகையைப் பரமேசுவரனுக்கு முன்பு பண்ணின பிரதிஜ்ஞைக்கு விரோதமாக இஷ்டப்படி எடுத்துவிடுவது தப்பு. சிகையை எடுப்பது ஒரு பெரிதா என்று கேட்கலாம். பொய் சொல்லுகிறது தப்பு அல்லவா? அது எவ்வளவு தப்போ

அவ்வளவு தப்பு இருவும். பரமேசுவரப்பிரீதியாக ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு ஸம்ஸ்காரம் பண்ணி, வைத்துக்கொண்டதைக் கிள்ளுக்கீரையாக எண்ணி மனம் போனபடி எடுக்கக்கூடாது. சிவலிங்கப் பிரதிஷ்டை செய்கிறார்கள். வேல், ஸாளக்கிராமம் வைத்துப் பூஜை செய்கிறார்கள். பின்பு கோபித்துக்கொண்டு எடுத்து எறிந்துவிடலாமா? அகஸ்மாத்தாகப் போனால்—திருடன் கொண்டு போனால் பாதகம் இல்லை. நாமாக வைத்ததை நாமாக வேண்டுமென்று மாற்றுவது பெரிய தப்பு. சௌளத்தை மட்டும் ஸங்கல்பத்தோடு பண்ணிக்கொண்டு அப்புறம் இஷ்டப்படி பண்ணுவது தப்பு. இப்படி பண்ணுகிறவர்கள் முதலில் அதைப் பண்ணாமல் இருக்கவேண்டும். மந்திர பூர்வமாக வைத்த சிகையை இஷ்டப்படி எடுப்பது தப்புத்தான். அதற்காகத்தான் ஸந்நியாஸாசிரமத்தில் அதை எடுக்கும் பொழுது மந்திரபூர்வமாக எடுக்கிறார்கள்.

ஜாதகர்மா முதலியவற்றை இனிமேல் பண்ண முடியாது. புனருபநயனம் பண்ணலாம். அதற்குக்கீழே இருப்பவற்றைச் செய்ய முடியாது. உபநயனம் அறிவு வந்தபோது செய்வது. 'பிக்ஷாசர்யம் சர' அதாவது 'பிக்ஷை எடு' என்று ஆசாரியன் சொன்னால் 'பாடம்' என்று அவன் பதில் சொல்லுகிறான். உபநயன காலத்துக்கு முன்பே ஸம்ஸ்கிருத ஞானம் இருக்கவேண்டும். அப்பொழுது உபநயன மந்திரம் சொன்னால் அர்த்தம் தெரியும். குழந்தைக்குத் தெரிந்தால் நிரம்ப பக்தி உண்டாகும். குழந்தைப் பருவத்திலேயே நமது மனதில் நாஸ்திக்யம் வந்துவிட்டது. அதனால் அது பலமாக இருக்கிறது. ஆஸ்திகத்தை அப்படியே போதித்தால் அதுவும் பலமாக நிற்கும்.

உபநயனம் முதல் பண்ணப்படும் ஸம்ஸ்காரங்கள் அறிவு வந்த பின்பு ஏற்படுபவை.

எந்த ஸம்ஸ்காரத்தையும் உரிய காலத்தில் பண்ண வேண்டும். அதனால் பாபபரிகாரம் ஏற்படுகிறது. வேறொரு காரியம் பண்ணிப் பாபம் ஸம்பாதித்திருக்கிறோம். அதை நீக்க மனம் வாக்குக் காயங்களால் ஸம்ஸ்காரம் பண்ண வேண்டும். நாம் பாபம் அந்த மூன்றினாலேயும் பண்ணியிருக்கிறோம். மனதால் கெட்ட எண்ணம் நினைத்திருக்கிறோம். வாக்கால் பொய் பேசியிருக்கிறோம். தேஹத்தால் பொய் பண்ணியிருக்கிறோம். பொய் பண்ணுவது என்ன? பாசாங்கு பண்ணுவதுதான் பொய் பண்ணுவது. மனோ வாக்காயங்களால் பண்ணிய பாபங்களை அவைகளாலே காரியங்களைப் பண்ணிப் போக்கிக்கொள்ள வேண்டும்.

மனதினால் பரமேசுவரத்தியானம் பண்ணி அர்ப்பணம் பண்ணவேண்டும்; வாக்கினால் மந்திரம் சொல்லவேண்டும்; காயத்தால் காரியம் பண்ணவேண்டும். இந்த மூன்றினாலும் ஸம்ஸ்காரம் பண்ணி மூன்றினாலும் பண்ணின பாபத்தைத் தீர்த்துக்கொள்ளவேண்டும். எல்லாம் பரமேசுவரப்பிரீதிக்காக என்று எண்ணிச் செய்யவேண்டும். எல்லாவற்றையும் பரமேசுவரார்ப்பணம் பண்ணவேண்டும். எதையும் காலத்திற் பண்ணவேண்டும்.

ஸம்ஸ்காரங்களைச் செய்து வந்தால் நல்ல ஸந்ததி உண்டாகும். வைதிகஸந்ததியார் சிஷ்டர்களாக இருக்கிறார்கள். புத்தி அவர்களுக்கு அதிகமாக இருக்கிறது. அது ஸம்ஸ்காரப் பிரயோஜனந்தான். முன்பு இருந்தவர்கள் செய்தது இரண்டு அல்லது மூன்று தலைமுறைக்கு அஸ்திவாரமாக இருக்கிறது. அந்த எல்லை தாண்டிப்போனால்

அப்புறம் கஷ்டந்தான். வைதிக ஸந்ததியிற் பிறந்த குழந்தைகள் லௌகிகத்தில் பிரவேசித்தால் அதிகமாகக் கீழே போகிறார்கள். மடை அடைத்துவைத்ததைத் திறந்து விட்டால் வெகுவேகமாக ஜலம் போகிறமாதிரி அவர்கள் தாம் கடுமையாக லௌகிகத்தில் இறங்கிவிடுகிறார்கள்.

நம்முடைய முன்னோர்கள் ஸம்ஸ்காரம் பண்ணவில்லை; அதனால் நமக்கு நன்மை உண்டாகவில்லை என்ற குறை நமக்கு இருக்கலாம். அதைப்போல நம்முடைய குழந்தைகள் குறைகூறாமல் நாம் நல்ல ஸம்ஸ்காரங்களைப் பண்ணி வைக்கவேண்டும்.

---

# 29

# பிரம்மசரியமும் விவாஹமும்

[16—11—1932]

**மா**தா பிதாக்களிடத்தில் ஏதாவது பாபதோஷங்க ளிருந்தால் அவை அவர்களிடத்திலுண்டாகிற ஜீவனையும் பாதிக்கும். அதற்காக ஒரு ஜீவன் யாருடைய கர்ப்பத்தில் வாஸம் பண்ணுகிறதோ எந்தப் பிதாவால் உண்டாகிறதோ அவர்களுடைய தோஷங்கள் அந்த ஜீவனுக்கு ஏற்படாம லிருப்பதற்காக ஸம்ஸ்காரங்கள் செய்யவேண்டும். மாதா பிதாக்களிடம் துர்க்குணங்கள் உண்டு. அவை அவர்களால் ஏற்படும் ஜீவன்களுக்கு உண்டாகாமலிருக்க ஸம்ஸ்காரங்கள் செய்யவேண்டும். அந்த தோஷங்கள் கார்ப்பிகம் என்றும் பைஜிகம் என்றும் இரண்டுவகைப்படும். கார்ப்பிகம் தாயால் உண்டாவது; பைஜிகம் தந்தையால் உண்டாவது. இந்த தோஷங்களின் நிவாரணத்திற்காக உபநயனம் வரையில் உள்ள ஸம்ஸ்காரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைச் செய்யவேண்டியவர்கள் மாதா பிதாக்கள். உபநயனம் வரைக்கும் ஸம்ஸ்காரங்களைச் செய்துகொள்ள புத்திரனுக்கு அருஹமான வயது வரவில்லை.

உபநயனம் என்ற வார்த்தைக்கு அர்த்தமென்ன? நயனம் என்றால் அழைத்துக்கொண்டு போவது என்று அர்த்தம். नयतीति नयनम् । கண்ணுக்கு நயனம் என்று பெயர். அது நம்மை அழைத்துக்கொண்டு போகிறது.

பதற்குக் காரணமென்ன வென்றால் ஜம்பூ மஹரிஷி என்பவர் ஆதிகாலத்தில் அங்கே தபஸ் செய்துகொண்டிருந்தார். அவர் நீண்டகாலம் தபஸ் செய்துகொண் டிருந்ததினால் அவர்மேல் புற்று மூடிக்கொண்டு செடிகொடிகள் முளைத்து ஜம்பூ விருக்ஷம் ஒன்று முளைத்தது. அவர் பூஜித்துவந்த மஹாலிங்கத்தை ஒரு சிலந்தியானது பூஜை செய்து வந்தது. அந்த மஹாலிங்கம் திறந்த வெளியில் இருந்ததனால் அதன்மேல் வெயில்படக் கூடாதென்று அச்சிலந்திப் பூச்சி தன் எச்சிலால் நூல் பந்தல் போட்டுக் கொண்டே இருந்தது. அந்த லிங்கத்தை ஒரு யானையும் தினந்தோறும் தன் துதிக்கையால் காவேரியிலிருந்து தீர்த்தம் கொண்டுவந்து மஹாலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணி பூஜைசெய்து வந்தது. அந்த அபிஷேக ஜலத்தால் சிலந்தி போட்ட பந்தல் அழிந்துவிட்டது. அதைக் கண்டு சிலந்திப்பூச்சி கோபமடைந்து அதனுடைய துதிக்கையினுள் புகுந்து கடித்துவிட்டது. ஆயுர்வேதத்தில் லூதாவிஷ மானது விஷங்களுக்குள் மிகக் கொடியது என்று சொல்லப்பட்டிருக்கிறது. லூதா என்றால் சிலந்தி என்று அர்த்தம். உடனே யானை அந்தச் சிலந்திப்பூச்சியைத் தேய்த்துக்கொன்றுவிட்டு அதன் விஷவேகத்தால் தானும் இறந்துவிட்டது. அந்தச் சிலந்தியானது கோச்செங்கட் சோழனாக மறுபிறப்பில் பிறந்தது. இறக்கும் ஸமயத்தில் கோபத்தினால் கண் சிவந்திருந்ததனால் சிவந்த கண்களையுடைய சோழனாகப் பிறந்தது. ஆகையினால்தான் அந்தச் சோழ அரசனுக்கு யானையைக் கண்டால் மறு பிறப்பிலும் பரமத் துவேஷ முண்டாயிற்று. அதற்காகவே யானை யேறா திருப்பணிகளாக 70 க்ஷேத்திரங்களில் செய்தான். அவன் பெரிய சிவ பக்தனாக இருந்தான் அவனுடைய சிவபக்தி மஹிமையை ஆழ்வார்கள்கூடப் பெரிய திருமொழியில் ஸ்லாகித்திருக்கிறார்கள். நாச்சியார்

கோயில் விஷ்ணு ஆலயத்தைக் கோச் செங்கணன் நிர்மாணம் செய்தான் என்று சொல்லும்பொழுது பல சிவாலயங்களைக் கட்டினவனென்று சிலாக்கியமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

முருக்கிலங்கு கனித்துவர்வாய்ப் பின்னைகேள்வன்
மன்னெல்லாம் முன்னவியச் சென்று வென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்ற வேந்தன்
சிரந்துணித்தான் திருவடிநும் சென்னி வைப்பீர்
இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோ ளீசற்
கெழில்மாட மெழுபதுசெய் துலக மாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.

பெரிய திருமொழி, 6 : 6 : 8.

# கலை மகள்

## ஒரு உயர்தர மாதப் பத்திரிகை

பல சித்திரப்படங்களோடு கூடியது

**சஞ்சிகை ஒன்றுக்கு 100 பக்கங்கள் அடங்கியது**

ஒவ்வொரு மாதமும் முதல் தேதியில் வெளிவருவது

**ராயல் அளவில் அமைந்துள்ளது**

**பதிப்பகம் :—சென்னை, மயிலாப்பூர், லா ஜர்னல் பிரஸ்**

முதல் சஞ்சிகை தை மாதம் முதல் தேதி

**இரண்டாம் வருஷம் ஆரம்பம்**

வருஷச் சந்தா ரூ. 4 வெளிநாட்டுக்கு ரூ. 5

தனி சஞ்சிகை அணா. 6

**Vol. I.**—கலை மகள் முதல் 6 பகுதிகளும் அடங்கியது பைண்டு செய்து கில்ட் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டது.

விலை **2—6—0**

**Vol. II.**— ,, ,, விலை **2—6—0**

---

## முருகன்—ஓர் உழவன்

ஸ்ரீமதி கிருஷ்ணகுமாரி மொழிபெயர்த்தது

மேனாட்டு அறிஞர்கள் பலரால் மதிப்புரைகள் பெற்ற பல நூல்களை எழுதிய ஸ்ரீமான் கே. எஸ். வேங்கடரமணி அவர்கள் ஆங்கிலத்தில் எழுதியதன் மொழி பெயர்ப்பு இது. ஆசிரியரது மனோபாவமும் ஆழ்ந்த கருத்துக்களும் வேறுபடாதவாறு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது 1932௵ சென்னை யூனிவர்ஸிடியாரால் இண்டர்மீடியேட் பரீட்சைக்குப் பாடமாக வைக்கப் பெற்றது; எல்லாப் புத்தகசாலையிலும் உபயோகிக்கத் தகுந்ததென்று துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப் பெற்றது.

விலை ரூ. 1—8—0.

கிடைக்குமிடம் :—

மானேஜர், கலை மகள் ஆபீஸ், மயிலாப்பூர்.

விரைவில் வெளிவரும் : :

# ஸ்ரீ
# சங்கர விஜயம்

ஸ்ரீ ஆசார்யாள் திவ்விய சரித்திரம் நமது காஞ்சி காமகோடி பீடாதிபதி அவர்கள் திருமயிலை ஸம்ஸ் கிருத கலாசாலையில் அருளியதை அழகிய படங் களுடன் நல்ல காகிதத்தில் யாவரும் வாங்கிப் படித்துக் களிப்புறும் வண்ணம் அச்சிட்டு மிகக் குறைந்த விலை யாகிய 8 அணுவுக்குக் கிடைக்கும். வேண்டுவோர் ஷை புத்தகப் பிரதிகளுக்கு முந்திக் கொள்ள வேண்டும்.

மதராஸ் லா ஜர்னல் ஆபீஸ்
மயிலாப்பூர், சென்னை.

B